# “மு. மேத்தாவின் கவிதைகளில் படிமங்கள் – ஓர் ஆய்வு”

**திருவள்ளுவர் பல்கலைக் கழகத் தமிழ் ஆய்வியல் நிறைஞர் (எம்.ஃபில்) பட்டப் பேற்றிற்காக அளிக்கப்பெற்ற ஆய்வேடு**




**ஆய்வாளர் :**

**சு. அருண் குமார்**, எம்.ஏ., எம்.பி.ஏ., பி.எட்.,
**பதிவெண் : 2013782**

**ஆய்வு நெறியாளர் :**

**எஸ்.ஷீலா ஜெயகுமாரி**, எம்.ஏ., எம்.ஃபில்., பி.எட்.,
**தமிழ் விரிவுரையாளர்**

## தமிழ்த் துறை,

ஊரீசு கல்லூரி,
**வேலூர் – 632001.**

## ஆகஸ்ட் – 2013

# சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | | |
|---|---|---|
| அக. | – | அகநானூறு |
| பரி. | – | பரிபாடல் |
| அ.வ. | – | அவர்கள்வருகிறார்கள் |
| ஆ.அ. | – | ஆகாயத்துக்கு அடுத்த வீடு |
| ஊர். | – | ஊர்வலம |
| எ.போ.ம. | – | என்னுடைய போதி மரங்கள் |
| ஒ. இ.சி. | – | ஒரு வானம் இரு சிறகு |
| க.கு. | – | கனவுக் குதிரைகள் |
| க.பூ. | – | கண்ணீர் பூக்கள் |
| கலி. | – | கலித்தொகை |
| ந.நா. | – | நடந்த நாடகங்கள் |
| ப. | – | பக்கம் |
| பக். | – | பக்கங்கள் |
| உ.ஆ. | – | உரையாசிரியர் |
| ப.ஆ. | – | பதிப்பாசிரியர் |
| ஆ.ப. | – | ஆண்டு பதிப்பு |
| ப.இ. | – | பக்கம் இல்லை |
| பா. | – | பாடல் |

# பொருளடக்கம்

# முன்னுரை

தமிழ்க் கவிதை நீண்ட கால வரலாற்றைக் கொண்டது. காலந்தோறும் பாடுபொருளாலும், வடிவத்தாலும் நிரம்ப மாற்றங்களை அது பெற்று வந்துள்ளது. இருபதாம் நூற்றாண்டில் அது புதிய வடிவத்தை உண்டாக்கிக் கொண்டது. அதுவே புதுக்கவிதையாகத் திகழ்கிறது.

புதுக்கவிதை என்ற சொல் யாப்பிலக்கணத்திற்குள் அடங்காத கவிதை என்ற பொருளையே உணர்த்துகின்றது. இத்தகைய சோதனை முயற்சியை முதன் முதலில் தமிழில் மேற்கொண்டவர் ந. பிச்சமூர்த்தி ஆவார். அவருக்கு முன்னர் மகாகவி பாரதியார் வசன கவிதை என்ற பெயரில் புதிய வடிவமொன்றை உண்டாக்க முயன்றார். ஆனால் அது அவருக்குப் பின்னர் வேறு எவராலும் செம்மையாகக் கையாளப்படாததால் நின்று போயிற்று எனலாம். இலக்கண மரபை மீறி எழுந்த புதிய வடிவமான புதுக்கவிதை பல்வேறு எதிர்ப்புகளைச் சந்தித்த போதிலும், செழித்து வளர்ந்தது.

புதிய செய்தியைப் புதிய வடிவத்தில் தருவதே புதுக்கவிதையாகும். உள்ளடக்கம், புறத்தோற்றம் ஆகிய இரண்டிலும் புதுமை இருப்பது புதுக்கவிதை என்ற பெயரின் பொருத்தத்தை மெய்ப்பிப்பதாகும். **“மரபுக் கவிதைகள் தொடமுடியாத சிகரங்களை இன்று புதுக்கவிதைகதள் தொடுகின்றன”** என்பது பேரா. அப்துல் ரகுமான் கூற்றாகும். இன்று இளைஞர்களிடையே பொலிவுடன் வாழ்வது இப்புதுக்கவிதையாகும்.

ஒரு கவிஞன் என்பவன் படைப்புத் தன்மையில் சிறந்திருக்க வேண்டுமே தவிர இலக்கண இலக்கிய ஆராய்ச்சியில் சிறந்திருக்க வேண்டும் என்பது அவசியம் இல்லை என்று கருதப்படுகிறது. இருப்பினும் மேத்தா இதற்கு விதிவிலக்காக இலக்கியத் தன்மைகளைப் பற்றியும் கொள்கைகளைப் பற்றியும்,

இலக்கண விதிமுறைகளைப் பற்றியும் தெளிவான சிந்தனையும் அறிவும் படிப்பும் உடையவராய்க் காணப்படுகிறார். இதன் விளைவாகப் பழைய இலக்கியப் போக்குகளை மீற வேண்டும் என்ற எண்ணம் இன்றிப் புதிய சோதனைகளில் வெற்றி பெற வேண்டும் என்ற ஒரு நோக்கத்தோடு மட்டுமே மேத்தா எழுதுவதற்கு முன் வருகிறார். பழையவற்றைத் தாழ்ந்தது என்று இகழாமல், புதியவற்றை உயர்வாகச் செய்ய வேண்டும் என்ற நல்ல நோக்கத்தோடு தம்முடைய கவிதை முயற்சிகளை மேத்தா மேற்கொண்டு வருகிறார் என்பதை அவருடைய கவிதை நூல்கள் காட்டுகின்றன. அவர் இலக்கியக் கொள்கைகளைப் பற்றிய தெளிவான சிந்தனையோடும், புதிய வடிவத்தை எப்படி உருவாக்க வேண்டும் என்ற புலமையோடும், உலக அரங்கில் பிற மொழிகளோடு தமிழை எப்படிச் சமமாக நிற்க வேண்டும் என்ற வேட்கையோடும் தம்முடைய கவிதைகளைப் படிமங்களின் வாயிலாக உணர்த்துகிறார், எனவே இவரின் கவிதைகளில் இருந்து இவ்வாய்வு பயணிக்கிறது.

## ஆய்வுத் தலைப்பு

**'மு. மேத்தாவின் கவிதைகளில் படிமங்கள் ஓர் ஆய்வு'** என்பது ஆய்வுக்குத் தெரிவு செய்யப்பட்ட தலைப்பாகும்

## ஆய்வு நோக்கம்

மு. மேத்தா அவர்கள் எழுதியுள்ள கவிதை நூல்களில் பொதிந்துள்ள படிமங்களை வெளிக்கொணர்வது இவ்வாய்வில் நோக்கமாகும்.

## ஆய்வு ஆதாரங்கள்

## முதன்மை ஆதாரங்கள்

மு. மேத்தா அவர்கள் எழுதிய கவிதை நூல்களுள் பன்னிரெண்டும், மு. சுதந்திரமுத்து அவர்களின் படிமம் என்ற நூலும், வெ. இராம. சத்தியமூர்த்தி எழுதிய

இலக்கியத்தில் படிமம் என்ற நூலும் இவ்வாய்வுக்கு முதன்மை ஆதாரங்களாகக் கொள்ளப்பட்டன.

## துணைமை ஆதாரங்கள்

படிமம் குறித்த ஆய்வேடுகள், ஆய்வு நூல்கள், ஆய்வுக் கட்டுரைகள், போன்றன துணைமை மூலங்களாகக் கொள்ளப்பட்டன.

## ஆய்வு எல்லை

மு. மேத்தா அவர்கள் எழுதிய கவிதை நூல்களில் மனச்சிறகு, திருவிழாவில் ஒரு தெருப்பாடகன், கம்பன் கவியரங்கில், என் பிள்ளைத் தமிழ், ஒற்றைத் தீக்குச்சி, மனிதனைத் தேடி ஆகிய நூல்களைத் தவிர்த்து கண்ணீர் பூக்கள், நடந்த நாடகங்கள், ஆகாயத்துக்கு அடுத்த வீடு, கனவுக் குதிரைகள், என்னுடைய போதி மரங்கள் , அவர்கள் வருகிறார்கள், ஒரு வானம் இரு சிறுகு, காத்திருந்த காற்று, ஊர்வலம், நந்தவன நாட்கள், இதயத்தில் நாற்காலி, முகத்துக்கு முகம் ஆகிய 12 நூல்களும் இவ்வாய்வின் எல்லைக்கு உட்பட்டுள்ளன.

## ஆய்வு அணுகுமுறை

இவ்வாய்வேட்டில், விளக்கமுறை, வரலாற்றுமுறை, ஒப்பாய்வுமுறை ஆகியன ஆய்வு அணுகுமுறைகளாகப் பின்பற்றப்பட்டுள்ளன.

## ஆய்வுப் பகுப்பு

இவ்வாய்வேடு முன்னுரை, முடிவுரை நீங்களாகக் கீழ்க்காணும் நான்கு இயல்களைக் கொண்டது.

1. படிமம் ஓர் அறிமுகம்
2. மு. மேத்தாவின் கவிதைகளில் காட்சிப் படிமம்
3. மு. மேத்தாவின் கவிதைகளில் குறியீட்டுப் படிமம்
4. மு. மேத்தாவின் கவிதைகளில் உவமைப் படிமம்

**'படிமம் ஒரு அறிமுகம்'** என்பது முதலாம் இயலாகும் இவ்வாய்வில் படிமம், தொன்மம், குறியீடு ஆகியவற்றின் விளக்கங்கள், படிமத்தின் வகைகள், படிமத்தின் தோற்றம் வளர்ச்சி, **'படிமம்'** மற்றும் **'படி'** என்னும் சொற்கள் சங்க இலக்கியத்தில் காணப்படும் இடங்கள், அயல் நாட்டு மற்றும் நம் நாட்டுக் கவிஞர்கள் படிமத்திற்குக் கூறும் விளக்கங்கள் போன்றன இவ்வியலில் ஆராயப் பெற்றுள்ளன.

இரண்டாம் இயலான **'மு. மேத்தாவின் கவிதைகளில் காட்சிப் படிமங்கள்'** என்பதில் இந்தியாவின் சுதந்திரம், காதலின் இன்பத் துன்பங்கள், போரின் வெற்றிகள், மக்களின் வருமை, பெண்ணிற்கு இழைக்கப்படும் அநீதிகள், கல்வியின் அவல நிலை, கவிஞனின் உணர்வுகள் முதலியன இவ்வியலில் ஆராயப்பட்டுள்ளன.

இந்திய சுதந்திரத்தில் காந்தியடிகளின் பங்களிப்பு, காதலின் உணர்வுகள், அயோத்தியின் நிகழ்வுகள், செருப்பின் குமுறல், நதி நீர் போராட்டங்கள், பெண்ணிற்கு ஏற்படும் இழப்புகள் ஆகியவற்றை **'மு. மேத்தாவின் கவிதைகளில் குறியீட்டுப் படிமங்கள்'** என்னும் மூன்றாம் இயலில் விளக்கப்பட்டுள்ளன.

**'மு. மேத்தாவின் கவிதைகளில் உவமைப் படிமங்கள்'** என்ற நான்காம் இயலில் உவமை மற்றும் உவமைப் படிமத்தின் விளக்கங்கள், உவமைப் படிமத்தின் வகைகள், மேத்தாவின் கவிதைகளில் படிமம் ஆகும் உவமைகள் மற்றும் படிமம் ஆகாத உவமைகள் எவையென்று ஆய்ந்து இவ்வியலில் தெரிவிக்கப்பட்டுள்ளது.

## முடிவுரை

இவ்வாய்வேட்டின் வழி தெளிவுப்படுத்தப்பட்ட செய்திகளின் தொகுப்பு தருவதுடன் எதிர்காலத்தில் ஆய்வாளர்கள் மேற்கொள்ள வேண்டிய மேலாய்வுக் களங்கள், ஆய்வுப் பயன் ஆகியன முடிவுரையில் இடம் பெற்றுள்ளன.

## துணை நூற்பட்டியல்

ஆய்வேட்டின் இறுதியில் இவ்வாய்வுக்குப் பயன்பட்ட நூல்கள், நூலாசிரியரின் பெயர்களில், அகர விரிசைப்படுத்தப்பட்டு அவை துணைநூற் பட்டியலாக அளிக்கப்பட்டுள்ளன.

## பின்னிணைப்பு

இவ்வாய்வேட்டினைத் தெளிவாக அறிந்து கொள்ளும் நோக்கத்தில் பின்னிணைப்புகள் இரண்டு பிரிவுகளாக பிரிக்கபட்டு உள்ளது. பின்னிணைப்பு ஒன்றில் மு. மேத்தாவின் படைப்புகளும் சிறப்புகளும் தொகுத்தளிக்கப்பட்டுள்ளன. பின்னிணைப்பு இரண்டில் படிமங்களின் புகைப்படங்கள் இனைக்கப்பட்டுள்ளன.

## இயல் – 1

## படிமம் ஒரு அறிமுகம்

சங்க இலக்கியத்தில் வந்த பாடல் வகைகளும் அதன் பின் தோன்றிய பாவினங்களும் மரபுக் கவிதைகள் என வகைப் படுத்தப்பட்டன. மரபுக் கவிதைகளில் படிமம் காணப்படினும் அதன் வளர்ச்சியைப் புதுக்கவிதைகள் தாங்கி நிற்கின்றன.

**'முற்றுருவகங்களே, படிமங்களாகக் கவிதையில் முதிர்ச்சி யடைகின்றன. மனம் காணும் காட்சி, சொற்சித்திரமாக அமைதலே படிமமாகிறது. உணர்வுதான் படிமங்களுக்குக் காரணமாகிறது. கருத்து, காட்சி, புலன் ஆகியவற்றைக் சார்ந்த படிமங்களைக் கொண்டே புதுக்கவிதை படிமக் கவிதையாகவே இன்று மாறியிருக்கிறது.'**[1]

**புதுக் கவிதையில் படிமம் சிறப்பான இடத்தைப் பெற்றது. 'படிமம்' என்பது ஏதேனும் ஒன்று பிறிதொன்றாக நிற்பது; பிறிதொன்றைப் பிரதிபலிப்பது; பிறிதொன்றை உட்கருத்தாய் உணர்த்துவது'**[2] படிமம் எனப்பட்டது. காட்சிப் படுத்துவதும் படிமம் ஆயிற்று.

### படிமத்தின் வரலாறு

படிமங்கள் அல்லது படிமக்கூறு பற்றிய ஆராய்ச்சி பத்தொன்பதாம் நூற்றாண்டில் தொடங்கியது. 1908 – ஆம் ஆண்டு சோகா என்னும் இடத்தில் கவிஞர்கள் கூடி கவிஞர்கள்சங்கம் என்ற அமைப்பை டி. இ. ஹுல்ம் தோற்றுவித்தார். கவிஞர்கள் புதன்கிழமை தோறும் கூடிகவிதை இன்பத்தை நுகர்ந்தனர். **'1908 ஆம் ஆண்டு கிறிஸ்துமஸ் நாளன்று "இலையுதிர்காலம்" என்ற டி.இ. ஹுல்மின் கவிதையைக் கொண்ட ஒரு சிறு வெளியீடு வெளிப்பட்டது.**

அக்கவிதையே புகழ்ப் பெற்ற முதல் கவிதையாக விளங்கியது.'[3] இந்தச் சங்கம் 1909 முதல் 1917 வரை இயங்கியது.

"1912 – 17ல் 'இமேஜிஸம்' என்ற படிமக் கொள்கையை வைத்துக் கொண்டு இங்கிலாந்திலும் அமெரிக்காவிலும் டி.இ. ஹுல்ம், எஸ்ரா பவுண்டு, கவிதை புனருத் தாரணத்தில் முழுமூச்சாக ஈடு பட்டதை கவனத்துக்குக் கொண்டு வர வேண்டி இருக்கிறது."[4]

'1910க்கு மேல் இங்கிலாந்திலும் அமெரிக்காவிலும் உள்ள கவிகள் சிலர் சேர்ந்து, கவிதைப் புனருதாரத்தைக் குறிக்கோளாக் கொண்டு இமேஜிஸ்ட்கள் என்ற கோஷ்டி உருவாகியது. பிரெஞ்சு இலக்கியத்தைப் பின்பற்றி வெர்ஸ் லிப்ரெ என்ற சுயோச்சா கவிதை முறையின் சாத்தியங்களை ஆராய்வதில் அக்கறைக் காட்டினார்கள், சொல் சிக்கனம், சகஜத் தன்மை, பேச்சு அமைதி, செம்மை, நூதன படிமப் பிரயோகம் ஆகிய தன்மைகளைக் கவனித்துக் கவிதைகளை அமைக்கலானார்கள். இவ்வகையில் டி.இ. ஹுல்ம், எஸ்ரா பவுண்ட், டி.எஸ். எலியட் போன்றோர் குறிப்பிடத் தக்கவர்கள். புதிய தொனியும் நூதன நடையும், நவீன படிமப் பிரயோகமும் அவைகளில் தெரிந்தன. விஞ்ஞான, இதர தொழில் துறைத் தகவல்களை உள்ளடக்கிய குறியீடுகள், பாணியே தோன்றியது'[5] என்று வல்லிக்கண்ணன் குறிப்பிடுவார்.

இவ்வியக்கம் அல்லது சங்கம் மூன்று காலக் கட்டங்களைக் கொண்டதாகத் திகழ்ந்தது. 'தொடக்கத்தில் ஹுல்ம் தலைமையில் உருவகம் பெற்ற நிலை, பின் எஸ்ரா பவுண்டின் தலைமையில் படிம இயக்கம் எனப் பெயரிடப்பட்டு உறுதியான கொள்கைகள் பெற்ற நிலை, அதன் பின் அமிலோவலின் தலைமையில் நெகிழ்ச்சிச் சென்ற நிலை என மூவகை நிலைகளைக் காணமுடிகிறது'[6] என்பார் மு. சுதந்திரமுத்து.

## படிமம் என்ற சொல்

'ஆங்கிலத்தில் 'இமேஜ்' எனப்படுவதே தமிழில் படிமம் என வழங்கப்படுகிறது. ஆங்கிலச் சொல்லின் மூலம் இலத்தீன் மொழிச் சொல்லில் உள்ளது. "போலிமை" என்ற பொருளுடைய 'இமித்தரை' 'இமோகா' என்ற இலத்தீன் சொற்களே அவை.'[7] இதனை உருத்தோற்றவியல் என்றும் உருக்காட்சி என்றும் கூறுகிறார்கள். படிமம் என்னும் சொல் தமிழ் இலக்கியத்தில் ஓர் இடத்தில் மட்டுமே காணப்படுகிறது. 'அகநானூற்றில் மட்டுமே படிமம் என்ற சொல் வருகிறது.'[8]

தமிழில் படிமம் என்னும் சொல்லின் வேர்ச்சொல் படி என்பதைக் குறிக்கும். 'படி' என்பது கற்படி, முகத்தலளவை வேடம், வகை, முறைமை, பிரதி, உருவகம், பூமி என்ற பொருள்களைத் தருவதாக உள்ளது."[9] கற்படி, வேடம், பிரதி, உருவம் என்னும் சொற்களும் போலிமை, பதிலீடு, மறுபடைப்பு என்னும் பொருளுடையனவாக விளங்குகின்றன.' தமிழில் உள்ள சங்க இலக்கியத்தில், "படி" என்ற வேர்ச்சொல் 14 இடங்களில் காணப்படுகிறது. 'ஐங்குறுநூற்றில் ஓர் இடத்திலும்; கலித் தொகையில் இரண்டு இடங்களிலும்; பரிபாடலில் நான்கு இடத்திலும்; அகநானூற்றில் ஆறு இடங்களிலும்; புறநானூற்றில் ஓர் இடத்திலும் வருகிறது'[10] என்பர் மணிகன்டன்.

## படிமம் குறித்த அகராதி விளக்கம்

'ஒன்றைப் போன்ற உருவம். வழிபாட்டுக்குரிய சிலை, சிற்பம், ஓவியம், கண்ணாடியில் பிரதிபலிக்கின்ற உருவம்; ஓர் உருப்பெருக்கி வழியே பெற்ற உருவம்; அல்லது கண்ணாடி ஊடகத்தின் வழியே பெற்ற உருவம். ஒன்றின் விளைவு; பொதுவான அல்லது ஒன்றின் தொடர்பான உவமை, உருவக அணிகள்; அலங்காரமான விளக்கம்; ஒன்றைத் தெளிவாக விளக்குதல், ஒரு பொருள் அல்லது ஒருவரைப் பற்றிய பொது மக்களின் கருத்து'[11] என்று அகராதிகள் கூறுவதாக சுதந்திரமுத்து கூறுகிறார். மேலும் அவர் 'இமேஜ்' என்ற சொல்லுக்குக்

காலப்போக்கில் பல அர்த்தங்கள் உள்ளன என்றும் '**பல் பொருள் ஒரு மொழி**' '**ஒரு பொருள் பன் மொழி**' தமிழ் அகராதி இருபத்திநான்கு அர்த்தங்கள் கூறுவதாக கூறுகிறார்.

1. ஆங்கிலத்தில் **"இமேஜ்"** என்னும் சொல் '**போலிமை, பதிலீடு, மறுபடைப்பு அல்லது ஒரு பொருளின் வெளித்தோற்றம் ஒற்றுமை அதாவது வடிவ உரு, சிலை அல்லது ஓவியம் என்ற பொருள்களை முதலாவதாகவும் கண்ணாடிப் பிரதிபலிப்புப் போன்ற, ஒளியில் பிரதிப் பலிக்கப்படும் எதிர் உரு**'[12] என்ற பொருளை இரண்டாவதாகவும் குறிக்கின்றது.

2. பெர்சிவல் அகராதி **"இமேஜ்"** என்னும் சொல்லுக்குப் '**பிரதிரூபம், விக்கிரகம், பாவனை, பிரதிமை, கிலை, சாயல், சாயை, மனோ சங்கற்பம்**'[13] என்று பொருள் தருகிறது.

3. வின்ஸ்லோ ஆங்கில – தமிழ் அகராதி **"இமேஜ்"** என்னும் சொல்லிற்கு '**உருப்படுத்து, விம்பி**'[14] என்ற பொருளைத் தருகிறது.

4. திருமகள் தமிழ் அகராதி **"படிமம்"** என்ற சொல்லிற்குப் '**பிரதிமை, உருவம், மாதிரி, நோன்பு, தவ வேடம், தூய்மை**'[15] என்று பொருளைக் கூறுகிறது.

5. தமிழ் மொழி அகராதி **"படிமம்"** என்ற சொல்லுக்குப் '**படிமக்களம்**'[16] என்று கூறுகிறது.

6. செந்தமிழ் அகராதி **"படிமம்"** என்ற சொல்லுக்குப் '**பிரதிமை, விரதம், சன்னதம், படிமக்களம், தூய்மை**'[17] என்ற பொருளைத் தருகிறது.

7. சென்னைப் பல்கலைக்கழக தமிழ் அகராதி **"இமேஜ்"** என்ற சொல்லுக்கு '**உருவம், படிவம், படிமம், உருச்சிலை, புனிதர் திருவுருவச்சிலை, ஒத்த வடிவம், உருவச் சாயல், உருமாதிரி, எதிர் உரு, எதிர் படிவம், பளிங்கில் தெரியும் நிழலுரு, உவமருவக அணி, கருத்துரு, கருத்துப் படிவம், மனச் சாட்சித் தோற்றம், (வினை) உருவங்கொடு, படந்தீட்டு, மனத்தில் உருவங் கற்பித்துக் காண், நிழலுருப் படுத்திக்காட்டு, உரு மாதிரியாய் அமை, மாதிரி எடுத்துக் காட்டாகப் பயன்படு, விளங்க வரித்துரை**'[18] என்ற பொருள்களைத் தருகிறது.

8. தமிழ் – தமிழ் அகர முதலி **"படிமம்"** என்ற சொல்லுக்குப் **'பிரதிமை, உருவம், மாதிரி, வடிவம், தவவேடம், நோன்பு, சன்னதம், காண்க, படிமக்களம், தூய்மை'**[19] என்ற பொருளைத் தருகிறது.

9. பவானந்தர் தமிழ்ச் சொல் அகராதி **"படிமம்"** என்ற சொல்லுக்கு **'வெறியாட்டு, வெண்மை'**[20] என்னும் பொருளைத் தருகிறது.

10. க்ரியா தற்காலத் தமிழ் அகராதி **"படிமம்"** என்ற சொல்லுக்கு **'விக்கிரகம், கவிதை, கதை அல்லது திரைப்படம் முதலியவற்றில் குறிப்பிட்ட உணர்வு, காட்சி, நிலை போன்றவற்றை மனத்தில் எழுப்பக் கூடியவிதத்தில் சொல், தொடர் அல்லது காட்சிகளைப் பயன்படுத்தும் முறை, மேற் குறிப்பிட்ட விதத்தில் பயன்படுத்தப்படும் சொல், தொடர், காட்சிப் போன்றவை, ஒருவரைப் பற்றிப் பிறரிடம் ஏற்படுத்தும் எண்ணம் அல்லது தோரணை'**[21] என்று அகராதிகள் "**படிமம்**" என்ற சொல்லிற்கு விளக்கம் தருகின்றன.

## படிமத்தின் பொருள்

ஒரு கவிஞன் தான் உணர்த்த விரும்பிய கருத்தினைப் படிப்பவன் அல்லது வாசகன் மனத்தில் சொல்லோவியமாக, காட்சி உருவமாகக் காட்டுவது தான் படிமம் அல்லது படிமவியல், உருகாட்சி ஆகும்.

எல்லா வகையான பொருள்களையும் காட்சிப் படுத்துவது படிமத்தின் அடிப்படையான பண்பாகும். படிமத்தை உவமை, உருவகம், வருணனை, அடை மொழி முதலிய எதன் வழியிலும் உருவாக்கலாம். பருப்பொருள் மட்டுமல்லாமல் நுண்பொருள்களும் காட்சிப் படுத்துதல் படிமத்தின் இயல்பாகும்.

**'எவ்வகைப் பொருளையும் காட்சிப் படுத்தி உருவகத்து வளர்ச்சியாய்த் தோன்றுவது படிமம்'**[22] உவமைகளில் வளர்ச்சி உருவகமென்றும், உருவகத்தின் வளர்ச்சி படிமம் என்று இரா. இராசேந்திரன் கூறுகிறார். எல்லா உருவகங்களும் படிமம் உரு வகத்தையும் தாண்டி மனத்தில் காட்சிப் படுத்துவது படிமம் ஆகும்.

'**படிமம் என்பது ஏதேனும் ஒன்று பிறிதொன்றிற்காக நிற்பது; பிறிதொன்றப் பிரதிபலிப்பது; பிறிதொன்றை உட்கருத்தாய் உணர்த்துவது; குறியீடுகள் அல்ல படிமங்கள் பயன்படுமிடம் வாழ்க்கையில் எத்தனையோ உள்ளன. அளவை நூல், கணக்கு, நுண் கலைகள், சமயம் ஆகிய எல்லா வற்றிலும் அஃது உண்டு**'[23] என்று தமிழண்ணல் கூறுகிறார். பொறிகளின் வழியாகப் புலனுணர்வைத் தூண்டுவதும் மனத்தில் எழும் பிரதிப்பலிப்பே படிமம் என்று பிரின்ஸ்டன் கலைக் களஞ்சியம் கூறுகிறது.

உவமை, இரண்டு பொருளின் ஒப்புமைப்படுத்துவதைத் தன்மையாக கொண்டது. உருவகம், இரண்டு பொருளின் வேறு பாட்டை நீக்கி இரண்டும் ஒன்றே என்பதை நிலை நிறுத்துவதை நோக்கமாகக் கொண்டது. படிமம் எந்தப் பொருளையும் ஓவியம் போன்று மனத்தில் காட்சிப் படுத்துவதை நோக்கமாகக் கொண்டது.

'**புதுக்கவிதையில் படிமம்**' என்ற ஆய்வேட்டில் சுதந்திரமுத்து அவர்கள் புதுக்கவிதையில் படிமம் **"உருவம், படிமம் போலன்றிப் சொற்கூட்டமாக உணரத்தக்கது. ஓசை நயம் மற்றும் சந்தத்துடன் தொடர்புடையது, தருக்க முறையிலான அமைப்பை உடையது"**[24] படிமம் என்பது உருவகத்தைப் போன்று இல்லாமல் ஓவியம், சிற்பம், மனப்படிமம் இவைகளுடன் தொடர்பு கொண்டது.

'**இலக்கியத்தில் படிமம்**' என்னும் நூலில் வெ. இராம. சத்தியமூர்த்தி அவர்கள் படிமத்தின் விளக்கத்தைக் கூறுகிறார். '**கவிஞர் ஒரு பொருளைக் காணுகின்ற பொழுது அவனுக்குச் சில எண்ணங்கள் உணர்ச்சிகள் ஏற்படுகின்றன. அப்பொருளைத் தன் கவிதையில் படைக்கின்ற வகையில் கவிஞன் அடைந்த எண்ணங்களை உணர்ச்சிகளைப் பிரதிபலிக்கச் செய்கின்றன அப்பிரதிபலிப்பே படிமம் எனப்படும்.**

**(எ.டு) கவிஞன் ஒரு கிளியைக் காண்கின்றான் அக்கிளி வலையில் அடைப்பட்டிருக்கின்றது. கவிஞனுக்கு அந்த நேரத்தில் அக்கிளியைப் பார்த்தவுடன் எண்ணம் அல்லது உணர்ச்சி தோன்றுகிறது. வானத்தில் பறந்து இன்பமாக இருக்க வேண்டிய கிளி இப்படி அடைப்பட்டு கிடக்கிறதே என்று எண்ணுகிறான். அவன் அக்கிளியைக் "கூண்டுக்கிளி" என்றழைக்கிறான். கூண்டில் வாழும் அக்கிளி கவிஞன் மனத்தில் "சுதந்திரம் பறிக்கப் பட்ட நிலைமையை" உணர்த்துகிறது. அந்தச் சுதந்திரம் இன்மையை வெளிப்படுத்தவே கூண்டுக் கிளி என்று சொல்கிறான். சுதந்திரம் இல்லாத மனிதனைக் குறிக்க இச்சொல்லைப் பயன்படுத்துகிறான். இவ்வாறு கவிஞன் மனத்தில் ஏற்பட்ட எண்ணமே 'படிமம்' எனப்படும்.'**[25]

## படிமமும் பிற இலக்கிய வடிவங்களும்

உருவகத்து வளச்சியாய்த் தோன்றி, எவ்வகைப் பட்ட பொருளையும் ஓர் காட்சிப்போல் தோன்றச் செய்தல் படிமம் ஆகும். **'உவமை உருவகங்களின் பரிணாம வளர்ச்சியே படிமம்'** என்று **'தோணி வருகிறது'** என்ற தம் நூலில் முன்னுரையில் கைலாசபதி கூறுகிறார். **'படிமம் என்பது சொல்லோவியம். ஒரு தொடரிலோ, பத்தியிலோ இடம் பெறுகிற அடைமொழி, உருவகம், உவமை, வருணணை போன்றவற்றால் படிமம் அமையும்'**[26] என்று சி. டே. லூயிஸ் கூறுகிறார்.

பிரின்ஸ்டன் அகராதி படிமத்தின் வகைகளாக மனப் படிமங்கள், அணிப்படிமங்கள், குறியீட்டுப் படிமங்கள் மற்றும் புலனுணர்வு படிமங்கள் என்று வகைப்படுத்துகிறது. புலனுணர்வு படிமத்தில் காட்சிப் படிமம், ஓசைப் படிமம், முகர்வு படிமம் மற்றும் உடலியக்க படிமத்தைப் பிரிவுகளாகக் கூறுகிறது.

கால்லியர்ஸ் அகராதி மனப்படிமங்களின் வகைகளாக பின் வருவனவற்றைக் கூறுகிறது பின்னிலைப் படிமம், நினைவப் படிமம், அறிதுயில் படிமம், மயக் காட்சிப் படிமம் ஆகும்.

## தொன்மம்

தொன்மம் படிமத்தில் இருந்து மாறுபட்டது காட்சிப் படுத்துவது படிமம் என்றால் கனவுகளின் மறுமலர்ச்சியாகத் தோன்றுவது தொன்மம் ஆகும். ஒன்றை ஒன்று சார்ந்து வருவது. **'மனிதனிடம் எழும் பாலுணர்ச்சியின் எதிரொலியாகத் தொன்மங்கள் உருவாகின்றன '**[27] அப்படி எழும் தொன்மங்கள் காட்சிப் படுத்தினால் படிமமாகிறது.

எஸ். எச். ஹூக் என்பவர் தொன்மங்களைச் சடங்குத் தொன்மங்கள், மூலத் தொன்மங்கள், பெருமிதத் தொன்மங்கள், மரபுத் தொன்மங்கள், மற்றும் அழிவுத் தொன்மங்கள் என ஐந்து வகையாகப் பிரிக்கிறார்.

**'நார்த்தாப்ஃஃபிரை என்பார் சடங்கும் மனிதனின் கனவும் ஒன்றாகச் சேர்ந்த கூட்டின் வார்த்தை வெளிப்பாடே தொன்மம் என்பார்.**[28] **'மீதாசு என்ற சொல்லுக்கே உண்மையான பேச்சு என்பது பொருளென்றும் பிளேடோ இயாம்பிளிகஸ் போன்ற பேரறிஞர்கள் கருத்துப்படி அதுவே உலகில் ஒரு காலத்தில் பேசப்பட்ட இயற்கையான பேச்சென்றும் கூறினார். நுண்ணிய சிந்தனைகள் தொன்மக் கருத்துக்களிலிருந்தே வெளிப் படுகின்றன என்றும் கவிதைக்கு இஃஃதே அடிப்படை என்றும் மனிதன் கற்க வேண்டிய விஞ்ஞானம் தொன்மமே என்றும் சுட்டிக் காட்டினார்.'**[29]

கனவுகள் முழுக்க முழுக்க ஒருவரின் அடி மனத்தில் உருபெறுகிறது. கவிதையானது கவிஞனின் அறிமனத்தால் சரிசெய்யப்படுகிறது. ஒரு மரத்தின் இரண்டு கிளைகளாகத் திகழ்வது மொழியும், தொன்மமும் ஆகும். பார் பீல்டு என்பவர் தொன்மங்கள் பெறப்பட்டவை என்றுக் கூறுவது தவறென்றும், மனிதன் மனத்தின் அனுபவங்களோடு தொடர்புடையன வெனினும் அவற்றிலிருந்தே பெறப்பட்டது என்று கூறுவதும் தவறான ஒன்றாகும் என்று வாதிட்டார்.

## குறியீடு

**'மேனாட்டுத் திறனாய்வு முறை தமிழில் கையாளப்பட்ட போது அத்துறைக் குரிய கலைச் சொற்கள் பல தமிழில் ஆக்கப்பட்டன. புதுக்கவிதைத்துறையில் மிகுதியும் வழங்கி வந்த 'சிம்பல்' என்னும் சொல்லுக்குத் தமிழ்ச் சொல் தேவைப்பட்ட போது ஆளப்பட்டச் சொல்லே, 'குறியீடு' என்பது. இச்சொல் முன்பே தமிழில் வழங்குவதாயினும், 'பெயர்' 'பெயரிடுதல்' இதழின் காலக் கட்டமாகிய அறுபதுகளில் தான், 'குறியீடு' இலக்கிய உத்தியைக் குறிக்கும் கலைச் சொல்லாகப் பயன்படத்தப்பட்டது.'**[30]

குறியீடு என்பது ஒரு பொருளை மட்டுமே குறிப்பதாக வருவது கவிதையில் படிமம் குறியீட்டுத் தன்மையுடன் அமைவது அரிதாகும். படிமம் என்பது குறியீட்டிற்கு எதிர்மறையானது. **'ஒரு படிமம் அல்லது உருவகம் குறிப்பிட்ட பொருளைக் குறிக்கும் வகையில் மீண்டும் மீண்டும் ஆளப்பட்டால் அவை குறியீட்டு நிலையை அடைந்துவிடும்.'**[31]

**'உள்ளுறை வளர்ச்சிக் குறியீடாகும்'**[32] உள்ளுறையின் முதிர்ச்சியான நிலையே குறியீடாகத் திகழ்வதாகும். ஒன்றை வேறொன்றால் குறிப்பது குறியீடு. இது இயல்பாகவே மொழி குறிப்புத் தன்மை மிக்க சொற்களைப் பெற்று நிற்கிறது. சில சொற்கள் நேரடியான பொருளை மட்டும் பெற்று நிற்பதில்லை; வேறொன்றைக் குறியீடாக உணர்த்தி நிற்கின்றன. தராசு என்பது எடை பார்க்கும் கருவியை மட்டுமல்லாமல் நீதி என்ற கருத்தையும் குறித்து நிற்கிறது. இது போல் புறா சமாதானத்தைக் குறிக்கிறது, சிங்கம் வீரத்தைக் குறிக்கிறது. ரோஜா அழகைக் குறிக்கிறது. சிவலிங்கமும் சிலுவையும் முதல் நிலையில் சமயங்களைக் குறித்து நின்றன. ஒவ்வொரு மொழிக்கும் நாடு சார்ந்த இயற்கைச் சார்ந்த தொல் கதைகள், புராணங்கள் சார்ந்த குறியீடுகள் இருக்கின்றன. கடல், காற்று, புயல், தென்றல் போன்ற சொற்களும் அவற்றின் தனிப்பட்ட அர்த்தம் தவிர வேறு ஓர் அர்த்தத்தையும் குறிப்பால் உணர்த்துகின்றன. பல சொற்களில் விவரித்து விளக்கிச் சொல்வதைக்

குறியீட்டுத் தன்மை வாய்ந்த ஒரு சொல் விளக்கி விடுகிறது. சில சமயம் செயல்கள் குறியீடாக நிற்கின்றன. **'விரல்களை மடித்து கை எதிர்ப்பு உணர்ச்சியின் குறியீடு. மார்பில் அடித்தல் சோகத்தின் குறியீடு'**[33] என்று பாலா கூறுகிறார்.

படிமம் என்பதன் முதிர்ச்சி நிலையே குறியீடாகிறது. புராணம், வரலாறு சார்ந்த குறிப்புகள் போன்றவை குறியீடுகளாகின்றன. அணிநலன்களில் செறிவானதும் முழுமையாக கவிதையை இயக்கும் ஆற்றல் குறியீட்டிற்கு உண்டு. சங்க இலக்கியத்தில் குறிகள், குறிப்பு மொழிகள், குறியீடுகள் கொண்டவைகளாகத் திகழ்கின்றன. பக்தி இலக்கியங்களிலும், குறியீடு பேரளவிற்குத் தன் ஆதிக்கத்தைச் செலுத்தி வருகிறது.

குறியீடு, படிமம் என்ற இரண்டு கூறுகளையும் பலர் மாறிப் பொருள் கொள்வதால் தவறாக விளக்கங்களைத் தருகின்றனர். அவள் **'சீதையைப் போலும் கற்பரசி'** என்றால் அது வெளிப்படையான உவமை. **'கற்பரசி கண்ணகி'** என்றால் இறுக்கமான உருவகம். **'இவள் கற்பு கண்ணகிக் கற்பு'** என்பது கருத்துப் படிமம். இந்தச் **'சிவகாமி ஒரு சீதை'** என்று சொல்லும் போது சீதை என்ற பெயர் மட்டும் குறிப்பிடப்படுகிறது; இது குறியீடு. அவள் கற்புநலம் பெயர் மூலம் குறிப்பாக உணரப்பட்டு **சிவகாமி** என்ற இன்னொரு பெண்ணை கற்பரசியாக உணர்த்துகிறது. இங்கு **'போல'** **'ஆகிய'** என்ற உவமான உவமேய, உருவகச் சொற்களின் சேர்க்கை எதுவும் தேவையில்லாமலே அணிநலன் வரியைச் செறிவாக்கி நிற்கின்றது என்று பொன்மணிவைரமுத்து **'சங்க இலக்கியத்தில் புதுக்கவிதைக் கூறுகள்'** என்னும் நூலில் கூறுகிறார்.

அப்துல் ரகுமான் அவர்கள் **'புதுக்கவிதையில் குறியீடு'** என்ற தன் ஆய்வு நூலில் குறியீடுகளின் வகைகளைக் இவ்வாறு கூறுகிறார். அவை, பொது நிலைக் குறியீடுகள், அகிலத்துவக் குறியீடுகள், தூயக் குறியீடுகள், திட்டமிட்டக் குறியீடுகள், மானுடக் குறியீடுகள். கடப்பியக் குறியீடுகள், அறிவு நிலைக் குறியீடுகள் ஆகும். படிமத்தில் குறியீடும் குறிக்கப்படுவதும் என இரண்டு

வகையாகப் பிரிப்பர். இவையிரண்டிற்கும் உள்ள பொதுத் தன்மைகள் மிகுதியாக இருந்தால் அது சிறந்த படிமமாகிறது.

## படிமம் குறித்த அயல் நாட்டவர் கருத்துகள்

சுருக்கமான சரியான வருணனை தான் கவிதையின் நோக்கம்; சாதாரன மனிதன் பார்வையைக் காட்டிலும் கவிஞனின் பார்வை பொருள்களின் உன்மை நிலைகளை உணர்வது[34] என்று டி.இ. ஹூல்மின் கூறுகிறார்.

"அறிவாலும் உணர்ச்சியாலும் ஆன ஒரு மனப் பாவனையை ஒரு நொடிப் பொழுதில் தெரியக் காட்டுவது தான் படிமம் என்பது; ஓர் ஓவியமோ, சிற்பமோ தன்னைச் சொற்கள் மூலமாக வெளிப்படுத்திக் கொள்கிற ஒரு கவிதைப் படிமம் ஆகும்.'[35] என்பது எஸ்ரா பவுண்டின் விளக்கமாகும்.

'சிந்திக்கப் பெற்ற, விரும்பப்பட்ட ஏதாவது கருத்து வடிவத்திற்கு விளக்கம் தரவோ, புலன்களின் உணர்வுகட்குக் கொண்டு வரவோ வேண்டுமென்று செய்யப்படும் மனத்தின் மொழிப் பெயர்ப்பே படிமம் என்று சிலர் கருதுவர்.'[36] "தொடர் உருவகம் என்பது நுண்பொருள் கருத்துகளை மொழிச் சித்திரமாகப் பெயர்த்தெழுவது"[37] என்கிறார் காலரிட்சு அவர்கள்

'படிமக்கவிதை இயக்கம் கண்டு கவிதை எப்படி அமைய வேண்டும் என்று கருதிய அமெரிக்கக் கவிஞன் எக்ஸ்ரா பவுண்டு பொருளை நேரடியாகச் சொல்ல அவசியமான சொற்களை மட்டுமே பயன்படுத்தல், நுண்ணிசையைப் பின் பற்றுதல் ஆகிய உத்திகளை அறிவித்தான்."[38]

"கவிஞன் படிமங்களின் வாயிலாகவே தனது சிந்தனைகளை வெளியிடுகிறான். படிமங்களின் வாயி லாகவே தன்னை உணர்த்துகிறான். இந்த அடர்த்தி, ஆழப்பாயும் ஆற்றல், சிந்தனைச் செறிவு, இசைலயம், உணர்ச்சி, சொல்,

**நெசவு. படிமப்பாங்கு ஆகிய அனைத்தும் கவிதையின் சுரமாக மட்டுமல்ல ஆற்றலாகவும் விளங்குகின்றான்."[39]**

படிமங்களின் சொற்களை விளக்க எக்ஸ்ரா பவுண்டு நேரடியான சொற்களை மட்டும் பயன் படுத்தினார் என்றும், ஒரு கவிஞனுக்கு படிமங்களின் மூலமாக தனது எண்ணங்களை படைக்கிறான் தன்னையும் உணர்த்திக் கொள்கிறான் என்பது புரூக்ஸ் கிளிந்த் கூறுவதாக ந. மாணிக்கம் அவர்கள் **'மு. மேத்தாவின் புதுக்கவிதைச் சாதனைகள்'** என்னும் தன் ஆய்வேட்டில் கூறுகிறார்.

சி. டே. லூயிஸ் அவர்கள் இலக்கியவியல் நோக்கில் ஆராய்ந்து படிமம் என்பது அறிவுணர்ச்சி மற்றும் ஐம்புல உணர்ச்சியை சார்ந்தது படைப்பவனுக்கும் படிப்பவனுக்கும் ஒரு தொடர்பை உண்டாக்குவது. உண்மை உலகையும் கவிதை உலகையும் இணைக்கும் உருவத்தின் வழியாக வெளிப்பாடு படிமம் ஆகும்.

பாகல் அவர்கள் இலக்கியவியல் நோக்கில் படிமத்தை ஆராய்ச்சி செய்கிறார் படைப்போன் மனத்தின் ஒப்புமையைக் காட்டுவது படிமம் என்றும் புலனுணர்வுடன் கூடிய உயர்புடைய ஒப்புமையே படிமம் என்கிறார். ஐ. ஏ. ரிச்சார்ட்ஸ் அணியியல் நோக்கில் படிமத்தைப் பற்றிக் கூறும் போது படிப்பவன் மனத்தில் காட்சிப் படுத்துவது படிமம் என்கிறார் மேலும் வேறுபட்டப் பொருள் உயிரூட்டும் செயல் முடிவு படிமம் ஆகும் என்று கூறிகிறார்.

அவ்னர் ஜிஸ் கலைத்தத்துவ அழகியல் நோக்கில் படிமத்தை அணுகுகிறார், பொருள்வாத அடிப்படையில் உலகியல் புறப் பொருள்களின் பிரதிப்பலிப்பு படிமம் ஆகும். உண்மைப் பிரதிபலிப்பால் அகவயத்தில் புறவய உலகத்தைப் படமாக்குவது அல்லது காட்சிப் படுத்துவது படிமம் என்று விளக்குகிறார். ஜியோஸ் கௌஸ்கி இலக்கிய வடிவ உருவியல் நோக்கில் படிமத்தை பற்றிக் கூறும் போது கலைஞனால் படைக்கப்படும் உலகப் பொருள்களின் வடிவ உருப்பதிலீடு படிமம்

என்றும், சூழலுக்கேற்பச் சிறப்புக் கூறாக, நோக்கமாக, குறியீடாகச் செயல்படும் இலக்கிய வடிவ உருவின் வாயிலாக படிமம் உருவாகும் என்றுக் கூறிகிறார்.

## படிமம் குறித்த நம் நாட்டவர் கருத்துகள்

கவிதை எங்கிருந்து பிறக்கின்றதோ அங்கிருந்தே படிமமும் பிறக்கின்றது என்று பொன்மணிவைரமுத்து கூறுகிறார். மேலும் போன்மை, உணர்ச்சி ஆகிய பண்புகளால் தான் படிமமும் படைக்கப்படுகின்றது. உள்ளத்தில் இருப்பதைச் சொல்லிலே புகுத்தக் கூடிய தன்மையைப் படிமம் பெற்று இருக்கின்றது. காட்சியாக அமையும் கலைக்கூறே படிமம் என்றும், உணர்வு, கற்பனை எதன் மூலமாக எழுகிறதோ அது இறுதியில் உருக்காட்சியாக புலப்படுகிறது. சொற்களாகவும், தொடர்களாகவும், முழுக் கவிதைகளாகவும் படிமங்கள் எழுகின்றன என்கிறார்.

கதிர் மகாதேவன் அவர்கள் படிமத்தைப் பற்றிக் கூறும் போது ஒரு மொழியில் படிமம் இடம் பெறும் போது உள்ளக் கருத்திற்கு உருவம் தருகிறது என்கிறார். **'மொழியில் படிமம் என்பது உள்ளக் கருத்திற்கு உருவம் தருவதாகும்.'**[40] படிமம் ஒரு மொழிக்கு பொதுவானதாக திகழ்ந்தாலும் கவிதை படிமமே சிறப்பானதாக கருதப்படுகிறது. பேச்சு மொழி, பழமொழி, உரையாடல், வருணனையில் படிமக் காட்சி இடம் பெறுவதை நாம் காணலாம். இவ்வகையான படிமங்களைத் தோற்றுவிப்பதற்கு அங்கதங்கள், உருவகங்கள், உவமைகள் தேவைப் படுகின்றன.

**"உருவகங்கள் படிப்போர் மனதில் படிமங்களைத் தோற்று விக்கவல்லன. உரை நடையில் இவை இடம் பெறும் போது சொல்லப்படும் பொருளின் ஆழத்தையும், அழகையும் அவை எளிதில் புலப்படுத்தி நிற்கின்றன "**[41] என்று மா. இராமலிங்கம் கூறுகிறார்.

கற்பனைக்கு அடிப்படையாகத் திகழ்வது படிமங்கள் என்று டி. கே. தரணி கூறுகிறார். மேலும், கற்பனைக்கு மனதில் பதியும் படிமங்களே அடிப்படையாகின்றன. இவை ஐம்பொறிகளையும் அவரவர் வாழ்வின் அனுபவங்களையும் கவிஞன் தன் கவிதையில் பயன்படுத்திக் கொள்கிறான் அவ்வாறே செவி வழிப்பட்ட கருத்துக்களும், செய்திகளும் கவிஞன் மனத்தில் படிமங்களாக உருப்பெருகிறது என்கிறார்.

வெ. இரா. சத்தியமூர்த்தி அவர்கள் படிமத்தைப் பற்றிக் கூறும் போது **'கவிஞன் ஒரு பொருளைக் காணுகின்ற பொழுது அவனுக்குச் சில எண்ணங்கள், உணர்ச்சிகள் ஏற்படுகின்றன. அப்பொருளைத் தன் கவிதையில் படைக்கின்ற வகையில் கவிஞன் அடைந்த எண்ணங்களை உணர்ச்சிகளைப் பிரதி பலிக்கச் செய்கின்றான். அப்பிரதிபலிப்பே படிமம் எனப்படும்.'**[42]

இராம. இராசேந்திரன் அவர்கள் 'புதுக்கவிதை இலக்கணம்' என்ற நூலில் உருவகத்து வளர்ச்சியாய்த் தோன்றி. எவ்வகைப்பட்ட பொருளையும் ஓர் காட்சிப் போல் மனத்துள் தோன்றச் செய்வது படிமம் ஆகும் என்கிறார்.

சுதந்திரமுத்து அவர்கள் படிமத்தைப் பற்றியக் கருத்து விளக்கம் தருகிறார். அவை, **'படிமம், கவிஞன் எதை வெளியிடக் கருதுகிறானோ, அதைக் காட்சித் தன்மை மூலம் விளக்கவும், தெளிவுப்படுத்தவும் உதவுகிறது "அரூபமான வார்த்தைகள், செயல் இழந்து போகும் போது அந்த இடத்தை நிறைவு செய்யப் படிமங்களால் மட்டுமே முடியும். அதீத மனநிலைகளை வெளிப்படுத்தும் கவிதைகளுக்குப் படிமம் தவிர்க்க முடியாத உத்தியாகவும் அங்கமாகவும் மாறுகின்றது" என்று பிரம்மராஜன் கூறுவது படிமத்தின் கருத்து விளக்க ஆற்றலைப் பலப்படுத்துகிறது. இவ்வகையில் படிமம் என்ற சொல்லே, கருத்து விளக்கம் என்றாகிறது.'**[43]

## இலக்கியத்தில் படிமம் பெறும் இடம்

இலக்கியத் திறனாய்வில் படிமவியல் என்பது மிகவும் குறிப்பிடத்தக்க ஒரு இலக்கிய நெறியாகும். **'இமேஜ்'** என்ற சொல்லுக்குறிய தமிழ் வடிவம் தான் படிமம் ஆகும். இதனை உருத்தோற்றவியல் என்றும் உருக்காட்சி என்றும் சில அறிஞர்கள் கூறுகிறார்கள்.

**இலக்கியத்தில் படிமம் என்ற சொல் மூன்று நிலைகளில் பயன்படுகிறது.**

**1. 'இலக்கியத்தில் அணியாகத் தோன்றுகின்ற அளவில் ஒரு பொருளின் பதிலீட்டைத்** தோற்றுவிப்பதாகச் **செயல்படுகிறது.**

**2. கணநேரத் தோற்றப் பொருளின் அல்லது நில உலக வருணனையில் இச்சொல் பயன்படுகிறது**

**3. பொதுவான குறியீட்டுத் தெளிவை விட நுட்பமான பொருள் தரக் கூடியதாக இச்சொல் ஆளப்படுகிறது.'**[44]

முற்காலத்தில் புலவர்கள் அனைவரும் புரியும் படியான மரபுப் படிமங்களைப் பயன்படுத்தினர். சங்க இலக்கியத்தில் குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என்ற மலர்ப் படிமங்கள் முறையே கற்பு, களவு, ஊடல், இரக்கம், பிரிவு பற்றிய உரிப் பொருட்களை விளக்குவனவாயின. இக்காலப் புதுக் கவிஞர்கள் பயன்படுத்துவன தனிப்படிமங்கள், காட்சிப் படிமங்கள், குறியீட்டுப் படிமங்கள், எண் படிமங்கள், தொடர் படிமங்கள், அடுக்குப் படிமங்கள், உருவகப் படிமங்கள், முதிர் உவமை படிமங்கள் மற்றும் அடைமொழிப் படிமங்கள் ஆகும்.

**தனிப் படிமங்கள் புதுக்கவிஞர்களால் மட்டுமே எழுதப் படுகின்றன. அவற்றிலும் மரபு அல்லது இயல்புப் படிமங்களின் சாயல் அமைகின்றது. படிமத்தில் குறியீடும் குறிக்கப்படுவதும் என இரண்டு உள்ளன.**

இவையிரண்டிற்கும் இடையேயுள்ள பொதுத் தன்மைகள் கூடுதலாக இருந்தால் அது சிறந்த படிமம் ஆகிறது.

"பூத்த கரும்பின் காய்ந்த நெல்லின்

கழனி ஊரன் மார்பு

பழனம் ஆகற்க

இம்மருதப் பாட்டில் அழகாகப் பூப்பதன்றிக் காய்த்தறியாத கரும்பு பரத்தையைக் குறிக்கிறது; நெல் காய்த்துப் பயன் தருவதாகலின் பிள்ளை பெற்றுக் குடியை வளர்க்கும் மனைவியைக் குறிப்பிடுகிறது. இவை இரண்டும் சமமாகக் கழனிகளில் விளையும் ஊரன் என்பது, பரத்தையரையும் மனைவியையும் ஒரு படியினராக நடத்துபவன் தலைவன் என்பதைக் குறிப்பிடப் பயன்படுகிறது. 'பழனம் ஆகற்க' என்பது எல்லோரும் பயன் படுத்தும் நீர் நிலைகள் போல் அவன் மார்பு பொதுவாகா தொழிக எனப் பொருள் படுகிறுது."[45]

சங்கப் பாடல்களில் படிமமே அதிகமாகப் பயின்று வரும் கவிதைக் கூறாக அமைகிறது. படிக்கும் போதே படிமக் காட்சிகளின் அழகு நம் கண் முன்பே காணமுடிகிறது. எட்டுத் தொகை நூல்களில் இக் கூறு அதிகமான இடங்களில் பயின்று வருகிறது. நிறப்படிமம் என்பது காட்சி படிமம் அல்லது புலனுணர்வுப் படிமத்தில் அடங்குகிறது, செவியுணர் படிமமும் புலனுணர் படிமமே, கிளைவிடும் படிமங்கள் அத்தனையும் மனம், காட்சி, போன்மை, கருத்து, புலன், தோற்றத்திற்கு அடிப்படையாக அமைவதாகும். **'கிளைவிடும் படிமங்கள் அத்தனையும் மனம், காட்சி, போன்மை, கருத்து, புலனை, கற்பனை என்ற ஆறு வகைகளில் அடக்கலாம்.'**[46]

படிமத்தால் பெயர் பெற்றப் புலவர்கள் பலர், அவர்களின் பாடல்கள் அடைமொழிகளாகவே இருந்தன. **"செம்புலப்பெயநீர், அணிலாடுமுன்றில், நெடுவெண்ணிலவு, ஓரேர் உழவன், குப்பைக் கோழித்தனிப்போர், பதடிவைகல், கங்குல்வெள்ளம்."**[48] இவை சங்கப் படிமங்கள். படிமம் என்பது உணர்வினால்

ஊகித்தறியப் படுவதாகும் என்பது பொன்மணிவைரமுத்து அவர்களின் கருத்தாகும்.

புலவன் காணும் காட்சிகள், கவிதைகள், மனதில் தோன்றும் கற்பனைகள், உள்ளத்தில் ஏற்படும் உணர்வுகள் போன்றவை மரபுக் கவிதையில் அடைமொழிகளாகப் பயன் பட்டிருக்கிறது. இந்த படிமங்களை நீக்கிவிட்டால் செய்யுள் இல்லை. **'உவமையென்பது தன் முகவரிகூறி நிற்கும் அணிநலன் என்றால், படிமம் என்பது தன்னை இழந்து ஒன்றில் தலைப்பட்ட நிலை.'**[49] இவை சங்க படிமங்கள். படிமம் என்பது உணர்வினால் ஊகித்தறியப் படுவதாகும் என்பது பொன்மணிவைரமுத்து அவர்களின் கருத்தாகும்.

சங்கப் பாடல்களில் எருமை, வண்டு என்பன தலைவனைக் குறிக்கும், தாமரை, கரும்பு என்பன பரத்தையரையும் குறிக்கும் மரபுப் படிமங்களாக விளங்குவதைக் காணலாம். **'முல்லை'** என்ற ஒரு படிமம் தலைவனின் சொன்ன சொல் தவறாத பண்பினையும், மனக்கட்டுபாட்டுடன் நடந்து, ஆற்றிருக்கும் தலையின் பான்மையினையும் குறிக்கும். கற்பு என்பதன் சிறப்பை தெய்வீகக் காதலை உணர்த்தும் **குறியீடு** முல்லை என்று தமிழண்ணல் கூறுகிறார்.

## கவிதையும் படிமமும்

அழகியல் ஈடுபாடு கொண்டு வளர்ந்த மனிதன் உருவாக்கிய சிறந்த கலை வடிவமே கவிதை. இலக்கிய உலகில் பிற வகைகளைக் காட்டிலும் தொன்மையும் சிறப்புப் பெற்று விளங்குவது கவிதையே. சொல், பொருள், உணர்வு, அணி, ஆகிய இவற்றின் அடிப்படையில் படைப்பாற்றல் உள்ள ஒருவன் ஆக்கித் தருவதே கவிதை,

**"உள்ளத்து உள்ளது கவிதை – இன்பம்**

**உருவெடுப்பது கவிதை**

**தெள்ளத் தெளிந்த தமிழ் – உண்மை**

**தெரிந்துரைப்பது கவிதை "**[50]

என்கிறார் கவிமணி. உள்ளத்து உணர்ச்சியையும் உண்மையையும் எடுத்துரைக்க வல்லது கவிதை என்பதை உணரலாம். இந்த உள்ளத்து உணர்ச்சிகளைப் புரட்சிக் கருத்துக்களுடன் படிப்பவன் மனத்தில் காட்சிப் படுத்துவது படிமமாகும்.

புதுக்கவிதை உத்திகளில் எதுகை மோனை சீர் தளை அடிவரையறை இவற்றிக்குள்ளாகக் கருதினவர்களும் உத்திகளில் அடைக்கலம் தேடினார்கள். அவை, விடுகதத் தன்மை, உரையாடல், கேள்வி பதில் முறை, நாட்டுப் பாடல் உத்தி, ஏனையக்கவி, சொல்லுடைப்பு, மறிதருதல், அங்கதம், கட்புல வடிவம், முரண், குறியீடு, பொருள் அடுக்கு, சொல் அடுக்கி வரல், படிமம் ஆகிய உத்திகள் ஆகும். இவற்றில் படிமம் தன்மை அணி, உருவகம் போன்ற உத்திகளால் காட்சித் தன்மையை அடைகிற படிமத்தின் அடிப்படை, காட்சிப் பொருளுக்குக் காட்சித் தன்மை தருவதும், கருத்துப் பொருளுக்குரிய காட்சித் தன்மை தருவதும் ஆகிய இரண்டு நெறிகள் கவிதைப் படிமத்தின் இலக்கணம் என்று சுதந்திரமுத்து அவர்கள் கூறுகிறார்.

## கவிதையில் படிமங்கள்

பத்தொன்பதாம் நூற்றாண்டில் தொடங்கிய படிம இயக்கம் உலகில் பலமொழி இலக்கியங்களைத் தன்னகத்தே கொண்டு வளர்ச்சி அடைந்தது எனலாம். படிம வளர்ச்சிக்கு டி. இ. ஹூல்ம், பிளிண்ட், ரிச்சர்டு ஆஸ்டிஸ்டின், ஹில்டாடுவட்டில், அமிலோவல், வெர்லேன், போதலேர் போன்றோர், கிரேக்கம், ஜெர்மணி, சீனம், எபிரேயம் ஆகிய மொழிகளின் கவிதைகளிருந்தும் படிமக் கொள்கைகளை வகுத்தனர். **'ஓரு சொல் தொடர் அல்லது வரி இன்னொன்றைக் குறிக்கும் போது படிமம் ஆகிறது'**[51] என்று பொன்மணிவைரமுத்து கூறுகிறார்.

கவிதையில் படிமங்களின் வகைகளை பின் வருமாறு காணலாம், மனப் படிமங்கள்; அணிப் படிமங்கள்; பகட்டுப் படிமங்கள்; பரந்த படிமங்கள்; உணர்வுளப்

படிமங்கள்; ஆழ்ந்த படிமங்கள்; அலங்காரப் படிமங்கள்; வேர்ப் படிமங்கள்; மூழ்கிய படிமங்கள்; குறியீட்டுப் படிமங்கள்; இயக்கஞ் சார்ந்த படிமங்கள்; மரபுப் படிமங்கள்; வழக்குப் படிமங்கள்; தனிப் படிமங்கள்; தற்சார்புப் படிமங்கள்; முன்மைப் படிமங்கள்; பகுப்பாய்வுப் படிமங்கள்; கற்பனைப் படிமங்கள்; இடமாற்றுப் படிமங்கள்; தன்மைப் படிமங்கள்; அடைப் படிமங்கள்; வடிவப் படிமங்கள்; உவமைப் படிமங்கள்; உருவகப் படிமங்கள்; ஆகியன கவிதையில் இடம் பெறுகின்றன என்று சுதந்திரமுத்து அவர்கள் **'படிமம்'** என்ற தன் ஆய்வு நூலில் கூறுகிறார். சுதந்திரமுத்து அவர்கள் கூறிய கவிதைப் படிமங்களைப் முறையே எண் படிமங்கள், தொடர் படிமங்கள், அடுக்குப் படிமங்கள் ஆகியவற்றில் அடக்கலாம்.

படிமத்தில் பலவகைகள் உள்ளன. அவை, அழகியல், கொள்கை முழக்கம், அங்கதம், நிகழ்ச்சி, முரண் பொருள், புதுமையியல்,தொன்மவியல், மிகை நவிற்சி, தத்துவம், இனிவரல் என வகைப் படுத்துகிறார் மித்ரா அவர்கள். ஆயினும் காட்சிப் படிமம், அணிப் படிமம், குறியீட்டுப் படிமம் என மூன்று பிரிவுகளில் அனைத்தும் அடங்கியுள்ளது. காட்சிப் படிமம் வாசகன் அல்லது கவிஞன் காணும் பொருளை மனதில் கொண்டு வந்து காட்சிப்படுத்துவது, அணிப்படிமத்தை இலக்கிய மொழி நடை வாயிலாகத் தோன்றுவது என்றும், குறியீட்டுப் படிமத்தை புரியாத உண்மைகளைப் புரியச் செய்வது என்று கவிஞர் சிற்பி கூறுகிறார்.

## முடிவுகள்

படிமம் கவிதையின் தலை சிறந்த உத்திகளுள் ஒன்று. புதுக் கவிதையை வளர்ந்த இயக்கங்கள் பின் வருமாறு, பிராய்டிசம், மார்க்சிசம், சர்ரியலிசம், படிமவியல், குறியீடியம், பாரதிக் காலம், மணிக் கொடிக் காலம், எழுத்துக் காலம், வானம் பாடிக் காலம், தற்காலம் மற்றும் பெண் புதுக் கவிஞர்கள் காலம், என வகைப்படுத்தப்படுகிறது. தமிழ் இலக்கியங்களில் மரபு புதுக்கவிதை இலக்கிய முயற்சிகளில் எழுத்து, வானம் பாடி, சிற்றிதழிகளில் படிமம் ஓர் இயக்கமாக வளர்ந்திருக்கிறது. இதில் பிரமிள், மு. மேத்தா, அப்துல் ரகுமான், அய்யனார், சிற்பி,

தமிழன்பன், இளங்கோவன் போன்றோர் படிமக் கவிஞர்கள் ஆவர். இதில், மு. மேத்தா அவர்கள் சிறப்பு மிக்க கவிஞராக திகழ்கிறார், அவர் பதினெட்டு கவிதை நூல்கள் இயற்றி இருக்கிறார். மு. மேத்தாவின் கவிதைகளில் ஆங்காங்கே படிமங்கள் புதைந்து இருக்கின்றன.

சங்க இலக்கியத்தில் படிமங்கள் காணப்படுகின்றன. **'பிற்காலத்தில் திருத்தக்க தேவர், சேக்கிழார் போன்ற படிமப் பெரும் புலவர்களைத் தருவதற்கு இச்சங்க இலக்கியப் படிம வளமே காரணமாகும்.'**[52] என்கிறார் தமிழண்ணல்.

இவர்களுக்கு முன் இருந்த பாரதி, பாரதிதாசன், கண்ணதாசன், சுரதா போன்றோர் வாக்கினில் உண்மை இருந்தால் கருத்தில் ஒளி உண்டாகும் என்ற கருத்தை சார்ந்து நிர்கின்றனர். இங்கே ஒளி உண்டாகும் என்ற சொல்லிலேயே காட்சிப்படிமத்தைத் தான் குறிக்கிறார்கள் என்பது தெளிவாகத் தெரிகிறது.

# அடிக்குறிப்பு

1. பொன்மணிவைரமுத்து, சங்க இலக்கியத்தில் புதுக்கவிதைக் கூறுகள், ப.43.
2. தமிழண்ணல், சங்க இலக்கிய ஒப்பீடு, ப.156.
3. வெ. இராம. சத்தியமூர்த்தி, இலக்கியத்தில் படிமம், ப.6.
4. வல்லிக்கண்ணன், புதுக்கவிதையின் தோற்றமும் வளர்ச்சியும், ப.137.
5. மேலது, ப.143.
6. மு. சுதந்திரமுத்து, படிமம், ப.29.
7. "அருஞ்சமம் கடந்து, படிமம் வவ்விய", (அகநானூறு : 149 :12).
8. கழகத் தமிழ் கையகராதி, ப.229.
9. வெ. இராம. சத்தியமூர்த்தி, முன்னூல், ப.1.
10. "துறை படி அம்பி அகமனை ஈனும்" (ஐங்குறுநூறு : 168 : 2).

    "பருகு படி மிடறு என்கோ பெரிய" (பரிபாடல் : 11 : 29).

    "மலர் அகல் மார்பின் மை படி குடுமிய" (பரிபாடல் : 15 : 9).

    "நாமத் தன்மை நன் கனம் படி எழ" (பரி : 15 : 25).

    "ஒன்றிய படி இது என்று உரை செய்வோரும்" (பரி : 19 : 52).

    "படி உண்பார் நுகர்ச்சி போல் பல் சினை மிஞிறு ஆர்ப்ப"

    (கலித்தொகை : 35 : 2).

    "படி கிளி பாயும் பசுங் குரல் எனல்" (கலி : 50 : 2).

    "பிடி படி முறுக்கிய பெருமரப் பூசல்" (அகநானூறு : 8 : 11).

    "ஞாயிறு படினும், 'ஊர் சேய்த்து' எனாது" (அக : 9 : 15).

    "படி ஞிமிறு கடியும் களிறே பெரு மரப் பூசல்" (அக : 8 : 11).

    "படி முழம் ஊன்றிய நெடு நல் யானை" (அக : 119 : 8).

    "ஆடாப் படி வத்து ஆன்றோர் போல" (அக : 123 : 2).

    "இனம் படி நீரின் கலங்கிய பொழுதில்" (அக : 212 : 9)

    "நீர் நணிப் படிகோடு ஏறிச் சீர்மிகக்" (புறநானூறு : 7 : 243).
11. மு. சுதந்திரமுத்து, முன்னூல், ப.16.

12. ஆக்ஸ் போர்டு அகராதி., வெப்ஸ்டரின் மூன்றாவது புதிய உலகப் பேரகராதி, ஆங்கில மொழியின் ரேன்டம் ஹவுஸ் அகராதி ஆகிய மூன்று அகராதிகளின் படி.

13. பெர்சிவல், ஆங்கில – தமிழ் அகராதி, ப.87.

14. வின்சுலோவின் ஆங்கில – தமிழ் அகராதி., ப.இ.

15. திருமகள் தமிழ் அகராதி, ப.662.

16. நா. கதிரைவேற் பிள்ளை, தமிழ் மொழி அகராதி, ப.933.

17. நசி. கந்தையா, செந்தமிழ் அகராதி, ப.444.

18. எஸ். வையாபுரிப் பிள்ளை, சென்னைப் பல்கலைக் கழகம் அகராதி, ப.இ.

19. மு. சண்முகப் பிள்ளை, தமிழ் – தமிழ் அகர முதலி, ப.இ.

20. எஸ். பவானந்தம் பிள்ளை, பவானந்தர் தமிழ் சொல் அகராதி, ப.323.

21. க்ரியா தற்காலத் தமிழ் அகராதி, ப.882.

22. இரா. இராசேந்திரன், புதுக்கவிதை இலக்கணம், ப.25.

23. தமிழண்ணல், சங்க இலக்கிய ஒப்பீடு, ப.156.

24. மு. சுதந்திரமுத்து, முன்னூல், ப.69.

25. வெ. இராம. சத்தியமூர்த்தி, முன்னூல், ப.2.

26. சி. டே. லூயிஸ், தி பொயடிக் இமேஜ், ப.18.

27. கதிர். மகாதேவன், தொன்மம், ப.20.

28. க. பஞ்சாங்கம், தொன்மத் திறனாய்வு, ப.7.

29. மேலது, ப.7.

30. மேற்கோள் : அப்துரல் ரகுமான், புதுக்கவிதையில் குறியீடு, ப.17.

31. அப்துல் ரகுமான், புதுக்கவிதையில் குறியீடு, ப.17.

32. இரா. இராசேந்திரன், முன்னூல், ப.31.

33. பாலா, புதுக்கவிதை ஒரு புதுப்பார்வை, பக்.23,24.

34. மேற்கோள் : வெ. இராம. சத்தியமூர்த்தி, முன்னூல், ப.7.

35. மேலது, ப.30.

36. தமிழண்ணல், முன்னூல், ப.156.

37. ரேனி வீல்க் அண்ட் வாரன், தியரி ஆப் லிட்ரேட்சர், ப.193.

38. மேற்கோள் : ந. மாணிக்கம், மு. மேத்தாவின் சாதனைகள், ப.29.

39. மேலது, ப.30.

40. கதிர் மகாதேவன், முன்னூல்,ப.18.

41. மேற்கோள் : வெ. இராம. சத்தியமூர்த்தி, முன்னூல், ப.81.

42. மேலது, ப.2.

43. அப்துல் ரகுமான், முன்னூல், ப.59.

44. மு. சுதந்திரமுத்து, முன்னூல், ப.145.

45. வெ. இராம. சத்தியமூர்த்தி, முன்னூல், பக்.75,76.

46. தமிழண்ணல், மேற்படி நூல், ப.157.

47. பொன்மணிவைரமுத்து, மேற்படி நூல், ப.309.

48. மேலது, ப.307.

49. மேலது, ப.309.

50. கவிமணி தேசிக விநாயகம், மலரும் மாலையும், ப.98.

51. பொன்மணிவைரமுத்து, முன்னூல், ப.310

52. மேலது, ப.158

## இயல் – 2

# மு. மேத்தாவின் கவிதைகளில் காட்சிப் படிமங்கள்

கவிதை என்பது உண்மையை அப்படியே அவ்வாறே கூறுவதன்று. கவிஞனின் எண்ணத்திற்கும் அவனுடைய உணர்வுக்கும் ஏற்ப உருவாகும் கலையாக்கமாகும். இயற்கை எத்தனையோ பொருட்களையும் செயல்களையும் கொண்டது. அதில் எதைத் தேர்வு செய்து எதை இணைத்துக் கவிதையை உருவாக்கம் செய்வான் கவிஞன் என்கிறார் அரிஸ்டாட்டில். **'கவிதை என்பது மொழியின் செம்மையான வடிவம், கலைப்படுத்தப்படும் வாழ்க்கை. ஒரு மொழியானது, வளர்ச்சியின் உச்சத்தையும், சொற்களின் முதிர்ச்சியையும் நுட்பத்தையும் அடைவது கவிதையில் தான்.'**[1]

கவிதைப் படிமம் என்பது பொருள், எண்ணம், கருத்து, உணர்வு என்பவைகளைப் புலன்வழிக் காட்சிகளாகவோ, நுண்காட்சிகளாகவோ, புலனுக்கு அப்பாற்பட்ட அனுபவங்களாகவோ மாற்றி வழங்குவது. படிமம் அலைந்து திரிவதில்லை. தீவிர சிந்தனைக்கும் அறிவுக்கும் இட்டுச் செல்லாமல் அனுபவத்தின் நுழை வாசலில் சுருக்கமாக இயங்குகிறது. அடுத்த நிமிடத்தில் நுழை வாசலில் சுருக்கமாக இயங்குகிறது. அடுத்த நிமிடத்தில் அந்த இயக்கம் மறைந்து படிமமே அனுபவமாகிறது. படிமம் என்பது புதுக்கவிதையின் பொருளை மனத்திற்கும் அறிவுக்கும் உணர்த்தப் பயன்படுகின்றது. உவமை, உருவகம், தொடர்களை அடுக்குதல் போன்றவற்றால் படிப்பவர் மனத்தில் ஒன்றைப் படிமமாக்குதலே படிமத்தின் பயனாகும்.

### படிமத்தின் வகைகள்

படிமத்தை வகைப்படுத்துவதில் மேலைநாட்டுத் திறனாய்வாளர்களும், நம் நாட்டுக் கவிஞர்களும் ஒரே முறையைப் பின்பற்றவில்லை. பொதுவாக படிமங்களை வகைப்படுத்துவதில் அவரவர் நோக்குப் படி வகைப்படுத்துகின்றனர்.

'பிரின்ஸ்டன் அகராதி மனப் படிமங்கள், அணிப் படிமங்கள், குறியீட்டு படிமங்கள் என்று வகைப்படுத்துகிறது.'[2]

## காட்சிப் படிமம்

காட்சிப் படிமம் என்பது கண்களால் காணக் கூடிய பொருளைக் கொண்டு மனத்திற்குள் ஓர் காட்சியை ஏற்படுத்தி நம் நினைவோட்டத்தில் அப்பொருளைக் கொண்டு வந்து காட்சிப் படுத்துவதாகும்.

"இரவு பொழிந்த மழையில் தண்ணீர் தேங்கி, விடிந்த பின் சூரியக்கதிர் வீச்சில் பளபளக்கிறது. கணத்தில் கண்களுக்கு அது கண்ணாடிப் பாளமாய் மின்னுகிறது.

"விடியும் தெருவில்
விழுந்த மழையால்
தெருவில் படியும்
கண்ணாடிப் பாளம் "

என்று தொடங்கும் போதே கண்ணாடிப் பாளம் என்ற காட்சிப் படிமம் உருவாகி விடுகிறது."[3]

## உவமைப் படிமம்

கவிஞன் தான் காணும் ஒன்றனுக்கு உணர்ந்த உருவம் கற்பித்தலே படிமத்தை உருவாக்கி விடுகிறது என்கிறார் பொன்மணிவைரமுத்து அவர்கள். உவமை உருவங்களின் பரிணாம வளர்ச்சியே படிமம் என்கிறார் கைலாசபதி அவர்கள். கவிதையில் முற்றிய உவமைகளே படிமங்களாக மாறுகின்றன. திருவள்ளுவரும் தன் திருக்குறளில் உவமைப் படிமங்களை கையாண்டுள்ளார்.

'அகர முதல எழுத்தெல்லாம் ஆதி
பகவன் முதற்றே உலகு.

எழுத்துகளுக்கெல்லாம் அகரம் முதன்மையாக உள்ளது. அது போல இவ்வுலகத்திற்கு முதன்மையாக இறைவன் இருக்கின்றான். தமிழுக்கு மட்டுமல்ல மற்ற எல்லா மொழிகளுக்குமே 'அ' என்பது தான் முதல் எழுத்து. ஆதி மனிதன் பேச முற்பட்ட போது முதலில் எழுந்த ஓசை 'அ' தான். இது எல்லாக் கண்டத்திலுமுள்ள எல்லா மொழிகளுக்கும் பொருந்தும்.

எப்படி எல்லா எழுத்துகளுக்கும், அகரம் முதன்மையாக விளங்குகிறதோ, அவ்வாறே அனைத்து உயிர்கட்கும், அனைத்து உலகங்களுக்கும் இறைவன் முதல்வனாய் விளங்குகிறான் என்ற முதன்மை தத்துவத்தை எடுத்துகாட்டு உவமையின் மூலம் விளக்குகிறார். 'அ' என்பது ஓசைகளின் தலையாய ஒலி மட்டுமல்ல அனைத்தும் அங்கிருந்து தான் பிறக்கின்றன. இறைவன் தலையானவன் மட்டுமல்ல அனைத்து உயிர்களுக்கும் அவனே பிறப்பிடம்.'[4]

**'அ'** அனைத்து மொழிகளின் முதல் எழுத்தையும், உலகம் கடவுளுக்கும் உவமைப் படிமங்களாக வந்துள்ளது. அனைத்து மொழிக்கும் எப்படி **'அ'** முதல் எழுத்தாக இருக்கிறதோ அதைப் போல இறைவன் அனைத்து மக்களுக்கும் பொதுவானவன். சமயம், மதம், ஜாதி, உயர்ந்தவன், தாழ்ந்தவன் என்று வகைப்படுத்த மொழிக்கும், இறைவனுக்கும் தெரியாது என்பதை உணர்த்தும் உவமைப் படிமங்களாகும்.

## குறியீட்டுப் படிமம்

படிமத்தின் முதிர்ச்சியே குறியீடாகின்றன. புராணம், வரலாறு சார்ந்த குறிப்பு மொழிகள் குறியீடுகளாகின்றன. **'புரட்சியை, ரோடு ரோலருடனோ அல்லது சர்ப்பயாகத்துனோ ஒப்பிட்டாலும், காமத்தை ராப்பிச்சைகாரனுடன் ஒப்பிட்டாலும் படிமப்படுத்தும் தன்மை தான் அடிப்படையாகிறது.'[5]** என்று சுதந்திரமுத்து கூறுகிறார்.

## மு. மேத்தாவின் கவிதைகளில் காட்சிப் படிமம்

மு. மேத்தாவின் கவிதைகளில் சுதந்திரம், காதல், கணவன் – மனைவி உறவு, போர், வருத்தம் ஏக்கம், அவலம், சமயம், அரசியல், அலங்காரம், கவிஞனும் கவிதையும் ஆகியவை பற்றிய கருத்துகள் காட்சிப் படிமங்களாக வருகின்றன.

### சுதந்திரம்

எவனொருவன் தன் எண்ணப்படி வாழ்க்கையை நடத்துகிறானோ, எவன் கட்டாயத்திற்கும், நிர்பந்தத்திற்கும், பலாத்காரத்திற்கும் உட்படுத்தப்– படாமலிருக்கிறானோ, எவனுடைய போக்குகள் தடைப்படுத்தப் படாமலிருக்– கின்றனவோ, எவனுடைய அவாக்கள் பூர்த்தியடைகின்றனவோ, எவனுடைய துய்ப்புகள் சேகரிக்கப்பட ஏதுவில்லாமற் போகிறதோ அவன் தான் சுதந்திர புருஷன் என்று கி.பி. முதல் நூற்றாண்டில் ரோமாபுரியில் வாழ்ந்த எபிக்ட் டீட்டஸ் சுதந்திரம் என்பதற்கு விளக்கம் தருகிறார்.

**'கண்ணீர் பூக்கள்'** என்னும் கவிதை வழியாக, நம் இந்திய மக்கள் ஆடுகளை வளர்ப்பது அக்காலக்கட்டத்தில் செல்வமாக கருதப்பட்டது என்று தெறியவருகிறது. ஆங்கிலேயர்கள் மாமிச பிரியர்கள் என்பதால் ஆடுகளை அவர்களிடம் விற்று பொருள் ஈட்டிக் கொள்ளலாம் என்று நினைத்து ஆடுகளை வளர்த்தார்கள். நாட்கள் செல்ல செல்ல மக்களே ஆடுகளாகப் மாறிப் போனார்கள் அடிமைகள் ஆனார்கள்.

**'ஆடுகளை உனக்காக வளர்த்தோம்**
**நாளடைவில் நாங்களே**
**மந்தை ஆடுகளாய்**
**மாறிப் போனோம்.'[6]**

இங்கே ஆடுகள் மக்களுக்கான காட்சிப் படிமமாய் வந்துள்ளது.

**'காத்திருந்த காற்று'** என்னும் கவிதை நூலில் இந்திய விடுதலைக்காகப் போராடிய எண்ணற்ற வீரர்களின் உயிர் தியாகத்தையும் அவர்கள் உடம்பில் பட்ட அடிகளையும் இங்கே ஆணிகளாக சுட்டிக்காட்டுகிறது இக்கவிதை. இந்திய தேசப்படம் சுவரில் மாட்டப்படவில்லை, உயிர் நீத்த தியாகிகளின் உடலில் மாட்டப்பட்டதாகக் கூறுகிறது. இந்திய சீதை என்னும் கவிதையில்,

**'இந்தியத் தேசப்படம்**

**சுவரில் ஆணியடித்தா**

**மாட்டப்பட்டது ?**

**இல்லை.....**

**நமது**

**மேனிகளில் அடித்த**

**ஆணிகளில் அல்லவா**

**அதை மாட்டுவதற்கு இடம்**

**காட்டப்பட்டது !'**[7]

இந்தியத் தேசப்படம் சுதந்திரத்திற்கும், ஆணிகள் உயிர் நீத்த வீரர்களுக்கும், சுவர் வீரர்களின் உடலுக்கும் குறித்து வந்த காட்சிப் படிமங்களாகும்.

**'நடந்த நாடகங்கள்'** என்னும் கவிதை நூலானது பெண் சுதந்திரம் பற்றிப் பேசுகிறது. பறவை தன் சிறகை கழற்றிவிட்டுச் செல்வதை ஒரு பெண் குடும்பம் என்னும் அடிமைச் சிறகைக் கழற்றிவிட்டுச் சுதந்திரமாகச் செல்கிறாள். அவள் குடும்பத்தில் அடிமையாக நடத்தப்பட்டாள் என்பதைச் சித்தரிக்கிறது.

**'ஒரு பறவை**

**தன் சிறகைக்**

**கழற்றுகிறது'**[8]

பறவை பெண்ணிற்கும், சிறகு குடும்பத்தின் அடிமைப் போக்கிற்கும் காட்சிப் படுத்துகின்ற காட்சிப் படிமமாகும்.

## காதல்

ஆண் – பெண் பால் வேறுபாடு காரணமாக எழுகின்ற ஈர்ப்பும், அதையொட்டி அவர்களிடையே தோன்றும் அன்புணர்வும் காதலாக மலர்கிறது. **“இரண்டு நெஞ்சங்களும் சேர்ந்து பார்வையால் பின்னிப் பின்னி வளர்ந்த அந்த வலையினில் தாங்கள் இருவருமே விடுபட முடியாத அளவுக்குச் சிக்கிக் கொண்டதையும், தூரத்தில் பிரிந்திருந்தும்..., விலக முடியாமல் விழுந்து பிடித்துக் கொண்டே ஏதோ ஒரு உறவில் கட்டுண்டு கிடப்பதையும் இருவருமே உணர்ந்தனர்”**[9] என்று ஜெயகாந்தன் விளக்குகிறார்.

**‘காதல்’** என்னும் கவிதையானது, விரித்தவர்களே அகப்பட்டுக் கொண்டார்கள் என்றும், இரண்டு கண்களும், அகப்பட்டுக் கொள்ள நாடகம் நடக்கிறது என்றும் கூறுகிறது.

**‘விரித்தவர்களே**
**அகப்பட்டுக் கொள்ளும்**
**விசித்திர இரண்டு கண்களும்**
**இரண்டு கண்களும்**
**எதிர்பட்டுக் கொள்ள**
**நான்கும் குருடான**
**பின் நடக்கும் நாடகம்.’**[10]

வலை கண்களுக்கும், இரண்டுக்கண்கள் ஆணிற்கும், இரண்டுக் கண்கள் பெண்ணிற்கும், நான்கும் குருடானது என்ற வரிகள் காதலுக்கு சாதி, மதம், நிறம், வசதிகள் கிடையாது என்பதை உணர்த்தும் காட்சிப் படிமமாகும். நாடகம் என்பது வாழ்க்கையைக் காட்சிப் படுத்துகிறது.

## <u>கம்பராமாயணத்தில் வரும் பாடல் வரிகள்,</u>

**“எண்ணரும் நலத்தினாள் இணையள் நின்றுழி**
**கண்ணொடு கண்இணை கவ்வி ஒன்றையொன்று**

**உண்ணவும் நிலைபெறாது உணர்வும் ஒன்றிட**

**அண்ணலும் நோக்கினான்; அவளும் நோக்கினாள் "**[11]

இது மிதிலை நகர வீதியிலே இராமனும் சீதையும் முதன் முதலாகச் சந்தித்தப் போது நிகழ்ந்த காட்சியைக் கூறிய பாடல். கண்கள் நடத்திய காதல் நாடகத்தில் இருவரும் கலந்த உணர்வினராயினர். இருவர் தம் கண்களும் ஒன்றையொன்று விழுங்கின. அவர்தம் இதயங்கள் இடமாறின, உணர்வுகள் ஒன்று கலந்தன.

**'தேசத்தைப் போலவே நம் வாழ்க்கையும் தெருவில் நிற்கிறது'** என்ற கவிதையில் பெண்ணின் தாய் அவள் கணவனோடு சேர்ந்து வாழ்வதைத் தடுக்கிறாள். அவன் வரும் சுதந்திர நாளில் உனக்கும் செலுத்திவிடுகிறேன் அஞ்சலி என்று இக்கவிதை தொடங்குகிறது.

தென்றல் வீசுவது இயற்கையான நிகழ்வு தான், மாலைப் பொழுதில் மழையின் அறிகுறியாக வீசும். காற்றடித்தால் ஜன்னல்களைச் சாத்திவிடுவார்கள். அவன், அவள் மேல் அன்பு வைத்து இருக்கிறான். அதனால் அவன் அவள் இல்லத்திற்கு வருகிறான். அவன் அன்பைப் புரிந்து கொள்ளாமலும், அவனை வீட்டிற்குள் வரவிடாமலும் அவள் தடுத்து விடுகிறாள். இதனை பின் வரும் கவிதையில் மேத்தா அவர்கள்,

**'நான் தென்றலாகத் தானே**

**வந்தேன்**

**நீ ஏன் உன்**

**ஜன்னல்களைச் சாத்தினாய் ?**

**உன் வீட்டுக்**

**காற்றுக்குக் கூட**

**விஷப் பல் முளைத்தது**

**எப்போது ?**

**உன்னை**

**உதயமாக்க முயன்றதற்காகவா**

**என்னை**

**அஸ்தமன மாக்கிவிட்டாய் ?'**[12]

இதில் தென்றல் ஆண்மகனையும், ஜன்னல் பெண்ணின் விருப்பமின்மையும், உதயம் அன்பையும், அஸ்தமனம் அன்பிலாமையும் குறித்து வந்த காட்சிப் படிமங்கள் ஆகும்.

நம்முடைய இதய வீணையைக் குழந்தைகள் மீட்ட வில்லை, வயதான உன் தாய் மீட்டுகிறாள். நாம் இருவரும் சேர்ந்து வாழ்வதற்குத் தடையாய் இருக்கிறாள்.

**'நம்**

**இதய வீணைகளின்**

**நரம்புகளை வருடுபவை**

**இளைய விரல்களல்ல –**

**முதிய மரக்கட்டைகள்!'**[13]

இங்கே வீணை, நரம்புகள், விரல்கள், மரக் கட்டைகள் படிமங்களாக வந்துள்ளன. வீணை ஆண் பெண் இருவரையும், நரம்புகளை குடும்பத்திற்கும், விரல்கள் குழந்தைகளுக்கும், மரக்கட்டைகள் பெண்ணின் தாய்க்கும் படிமங்களாக வருகின்ற காட்சிப்படிமமாகும்.

**'நடந்த நாடகங்கள்'** என்னும் கவிதை நூலில் கொடிக் கம்பத்தில் இருந்து கொடி பறந்த படி ஒரு பெண்ணைப் பார்த்துச் சொல்கிறது. **"நீ முதல் குழந்தையை ஈன்று கொள்ள தாமதப்படுத்து இரண்டாம் குழந்தையோடு பெற்றெடுப்பதை நிறுத்து"** என்று கொடி அறிவுரை கூறுவதாக மேத்தா அவர்கள் கூறுகிறார்.

**'முதல் மலரைத்**

**தாமதப்படுத்த –**

**இரண்டாம் மலருடன்**

**பூப்பதை நிறுத்து !'**[14]

இங்குக் கொடி பெண்ணிற்கும், முதல் மலர், இரண்டாம் மலர் குழந்தைகளுக்கும் ஆன காட்சிப் படிமங்களாகும்.

### போர்

ஒரு நாட்டின் மீது மற்றொரு நாடு போர் தொடுப்பது போர் என்று அறியப்படுகிறது. போர் என்பது மற்றொருநாட்டின் எல்லையை விரிவுப்படுத்தவும், தன்னுடைய வீரத்தை நிருபிக்கவும் செய்யப்படுவதாகும்.

**'வெற்றித் தூண்'** என்னும் கவிதையில், போரில் வெற்றி பெற்றுத் திரும்பும் வீரர்களைப் பெண்கள் மலர்த்தூவி வரவேற்கின்றனர். போரில் எதிரி நாட்டின் படைவீரர்கள் இறந்ததனால் அவர்களின் மனைவியர் விதவைகள் ஆனார்கள் என்பதை,

**'மகளிர் கூட்டம்**
**வரவேற்பளித்தது**
**மலர்களைத் தூவி!**
**எதிரி நாட்டுப் பெண்களை**
**விதவைகளாக்கி வந்த**
**வீரர்களுக்கு!'**[15]

இங்கு விதவைகள் வெற்றியைக் குறிக்க வந்த காட்சிப் படிமம் ஆனார்கள்.

### வருத்தம்

மனத்துக்குப் பிடிக்காத நிகழ்ச்சிகளால் அல்லது இழப்பினால் ஏற்படும் துன்ப உணர்வு, வேதனை, மனத்தாங்கல், மனக்குறை, பிறருடைய மனம் வருந்தும் முறையில் அல்லது விரும்பத்தகாத முறையில் தான் நடந்து கொண்டதற்காக ஒருவர் மனப்பூர்வமாகத் தெரிவிக்கும் ஆதங்கம் வருத்தமாகும்.

**'மாம்பழ ஊரில் மனக் குயில்கள் அழுகின்றன'** என்ற கவிதையில் காந்தியடிகள் இறந்த செய்தியைக் கேட்டு இந்திய நாட்டில் உள்ள பெண்கள் அழுகின்றனர் என்று பின் வரும் கவிதை கூறுகிறது,

**'மாம்பழ ஊரில் எங்கள்**
**மனக் குயில்கள் அழுகின்றன'**[16]

மாம்பழ ஊர் இந்தியாவிற்கும், மனக் குயில்கள் பெண்களுக்கும் வந்த காட்சிப் படிமங்களாகும்.

கோவை வேளாண்மைப் பல்கலைக் கழக மாணவிகள் மூவர் தர்மபுரியில் இலக்கியாம்பட்டி என்ற இடத்தில் பிப்ரவரி 2ஆம் தேதி 2000ஆம் ஆண்டு உயிரோடு எரிக்கப் பட்டதைச் சித்தரிக்கும் இக்கவிதை, நான் கல்வி கற்கத்தான் என் மகளை கல்லூரிக்கு அனுப்பினேன். அவள் பிணமாக வருவாள் என்று எனக்குத் தெரியாது. இது யார் செய்த குற்றம் ? என்று பெற்றோர்கள் கேள்வி கேட்பதாக பின் வரும் கவிதை வழியாக மு. மேத்தா அவர்கள் கூறுவது கீழ்வருமாறு,

**'கோயிலுக்குப் போறதுக்குக்**
**கூடையிலே பூப்பறிச்சேன்**
**பூப்பறிச்ச கூடையிலே**
**தீப்பிடிச்ச ஞாயமென்ன ?'**[17]

இதில் கோயில் கல்லூரிக்கும், கூடை கல்விக்கும், பூப்பறித்தல் படிப்பதையும், தீ இறந்த பெண்களையும் குறித்து வந்த காட்சிப் படிமங்கள் ஆகும்.

தஞ்சையில் மழையில்லாத காரணத்தாலும், காவிரி நதி நீர் சரியான நேரத்திற்குக் கிடைக்காததாலும், அங்கு வாழும் மக்கள் பசியின் கொடுமையால் உயிரிழந்தனர். யானை கட்டி ஏர் உழுத தஞ்சை மக்களின் உணவாதாரம் மிகவும்

நளிந்து போய் விட்டது. பொங்கல் பண்டிகைக்குத் தான் புதுப் பானையில் புதிய அரிசி போட்டுப் பொங்கல் வைப்பர். ஆனால் தஞ்சையில் சுடுகாட்டில் அன்றாடம் பொங்கல் வைக்கின்றனர். அன்றாடம் மக்கள் இறந்து கொண்டே இருக்கின்றனர். புதுப்பானை, புது அரிசி, பால் என வரிசையாக இருக்கிறது இறந்தவர்களின் சமாதியில்,

**'ஊருக்கெல்லாம்**

**சோறு போட்டவனுக்கு**

**இப்போது**

**ஊர் கூடிச்**

**சோறு போடுகிறதாம்...**

**அரிசி வேகவில்லை**

**மூட்டிய நெருப்பில்**

**உயிரிழந்த உழவர்கள்!**

**காவிரியில்**

**தண்ணீர் வரவில்லை**

**மயானத்தில் பொங்கல் வந்துவிட்டது!'**[18]

இங்கே பொங்கலுக்கு வாய்க்கரிசியும், உடன் பால் என்ற நிகழ்வு புதுப்பானைக்கு படிமங்களாக வந்துள்ளது. பானை, அரிசி, பால் பொங்கல் பண்டிகையை காட்சிப்படுத்தும் காட்சிப் படிமமாகும்.

**'மாறிய மதுரைகள்'** என்னும் கவிதையில் அன்று கண்ணகி தன் கணவன் அநீதியாக கொல்லப்பட்டதை அறிந்து நியாயம் கேட்டு வாதாடினாள், கோபத்தினால் தனது இடப் பக்க முலையைத் திருகி எறிந்து மதுரையை எரித்தாள். இன்றைய கண்ணகியான பெண்களைக் கணவர்களே கொளுத்துகிறார்கள். வரதட்சணை வாங்கும் வழக்கம் மாறவில்லை, தொடர்ந்து கொண்டே இருப்பதாக மேத்தா வருதத்துடன் இக்கவிதையின் வாயிலாக தெறிவிக்கிறார்.

**‘கண்ணகியாவது**

**கோவலனுக்காகக்**

**கொளுத்தினாள் மதுரையை!**

**இன்றைய**

**கண்ணகிகளின் கதையோ**

**பரிதாப மானது!**

**அவர்களைக்**

**கோவலர்களே வந்து**

**கொளுத்துகிறார்கள்!’**[19]

கண்ணகி மனைவிக்கும், கோவலன் ஆணிற்கும், தீ அநீதிக்கும் படிமங்களாக வந்து காட்சிப்படுத்துகின்ற காட்சிப் படிமங்களாகும்.

அன்னை இந்திராகாந்தி அவர்கள் சீக்கிய பாதுகாவலர்களால் சுடப்பட்டு இறந்து போனார். அவரது இரத்தம் இந்தியா முழுவதும் நனைந்த போது உலகம் கண்ணீரால் கழுவி விட்டது. இந்தியா மட்டும் கண்ணீர் சிந்தவில்லை உலக மக்கள் அனைவருமே கண்ணீர் சிந்தினர், அவர் இறந்த செய்தியை அறிந்து,

**‘இரத்தத்தால்**

**இந்தியா நனைந்த போது**

**உலகம் அதைக்**

**கண்ணீரால்கழுவிவிட்டது.’**[20]

இந்தியா இந்திராகாந்திக்கும், உலகம் மக்களுக்கும் படிமங்களாக வந்து காட்சிப் படுத்திய காட்சிப் படிமமாகும்.

## ஏக்கம்

ஏக்கம் என்பது இழந்ததை அல்லது கிடைக்காததை எண்ணுவதால் ஏற்படும் வருத்த உணர்வாகும், குழந்தையில்லாத தம்பதிகள் குழந்தைக்காக ஏங்குவதும், திருமணம் ஆகாத பெண்களை எண்ணி எப்போது நம் பெண்ணுக்குத்

திருமணம் ஆகும் என்று பெற்றோர்கள் ஏங்குவதும், வேலை கிடைக்காத ஒருவர் வேலைக்காக ஏங்குவதும், காதலன் காதலிக்காக ஏங்குவதும், காதலி காதலனுக்காக ஏங்குவதும் ஏக்கமாகும்.

'**நடந்த நாடகங்கள்**' என்னும் கவிதையில் காதலுனுக்காக ஏக்கத்தோடு காத்திருக்கும் காதலியும், காதலிக்காக ஏக்கத்தோடு காத்திருக்கும் காதலனைப் பற்றிப் பின் வரும் கவிதை இவ்வாறாக கூறுகிறது,

**"பொழுது விடிந்ததா ?**
**அது எப்படி விடியும் ?**
**என் சூரியன் இன்னும்**
**வரவில்லையே – "[21]**

தோழி, அனார்கலியைப் பார்த்து விடியற் காலை வந்து விட்டது. சலீம் வரமாட்டார் என்று கூறினாள். என் காதலன் சூரியனைப் போன்றவன் அவன் வராமல் பொழுது விடியாது என்றாள் ஏக்கத்துடன். சூரியன் காதலன் சலீமிற்குப் படிமமாக வந்து, அவனை வெல்ல யாராலும் முடியாது அவன் சூரியனைப் போன்று பலம் கொண்டவன் என்பதைக் காட்சிப்படுத்துகின்ற காட்சிப் படிமமாகும்.

சலீமிடம் காவலன் கூறுகிறான், அனார்கலியைத் தேடிச் செல்ல வேண்டாம் பொழுது விடிய போகிறது என்றான். அதற்குச் சலீம் என் அனார்கலி இன்னும் வரவில்லை, அது எப்படி சந்திரன் மறையும் என்றான்.

**"வேண்டாம் இளவரசே**
**வீம்பு!**
**விடிந்து விட்டது –**
**இனிமேல் பாவையைத் தேடிப்**
**போய்ப் பயனில்லை "**
**விடிந்து விட்டதா ?**
**அது எப்படி விடியும் ?**

**என் சந்திரன் இன்னும்**

**போக வில்லையே ?"[22]**

இங்கே பாவை, சந்திரன் அனார்கலிக்குக் படிமமாக வந்து, அனார்கலி சந்திரனைப் போல் மென்மையானவள் என்பதைக் காட்சிப்படுத்திய காட்சிப் படிமமாகும்.

காதலன் காதலியை நினைத்து ஏக்கத்துடன் இருப்பதாக பின் வரும் கவிதைக் கூறுகிறது. காதலியின் பார்வை சூறாவளி காற்றாகவும், காதலன் மனம் பழுத்த இலையாகவும், காதலியைக் கண்ட காதலன் மனம் அவளின் நினைவால் சுற்றித் திரிவதாகவும் மேத்தா அவர்கள் பின் வரும் கவிதையில் கூறுகிறார்.

**'உன் பார்வையோ**

**தொட்டுத்**

**தூக்கிச் செல்லும்**

**சூறாவளி.**

**படபடக்கும்**

**என் மனமோ**

**பழுத்த இலை![23]**

சூறாவளி காதலிக்கும், பழுத்த இலை காதலனுக்கும் வந்த காட்சிப் படிமங்களாகும்.

**'பகல் ஒரு பைத்தியம்'** என்னும் கவிதையில் காதலன் காதலியிடம் இரவும் பகலும் மாறி மாறி வருகிறது, காதலியே காலம் கடந்து கொண்டு இருக்கிறது என் மனம் என்ற குதிரையில் உன்னை ஏற்றி வந்த என்னிடம் உன் காதலைச் சொல்ல மாட்டாயா ? என்று காதலன் காதலியிடம் கேட்பதாக அமைந்துள்ளது

**'பகல் அரசன் என் மீது**

**படையெடுக்கிறான்**

**இரவுச் சக்கரவர்த்தியோ**

**மூச்சுவிட முடியாமல்**

**என்னை முற்றுகையிடுகிறான்....**

**சம்யுக்தையே!**

**இதயக் குதிரையில் உன்னை**

**ஏற்றிக் கொண்டுவந்த**

**பிருதிவிராஜனிடம்**

**நீ**

**பேச மாட்டாயா ?'**[24]

பகல் அரசன் சூரியனையும், இரவுச் சக்கரவர்த்தி சந்திரனையும், சம்யுக்தை காதலியையும், பிருதிவிராஜன் காதலனையும் காட்சிப்படுத்தும் காட்சிப் படிமங்கள்.

**'இதயத்தில் நாற்காலி'** என்னும் கவிதையில் இளைஞர்கள் படித்து முடித்து வாங்கிய பட்டம் கையில் இருக்கிறது. வேலை தான் அதற்கேற்றபடி கிடைக்கவில்லை என்ற இளைஞர்களின் ஏக்கத்தை மேத்தா அவர்கள் பின் வரும் கவிதையின் மூலம் பதிவு செய்கிறார்.

**'படித்த நூல்**

**நாங்கள்**

**பிடித்த நூல்**

**கையில் இருக்கிறது**

**பட்டம் தான் காற்றில்**

**படபடத்துப் பறக்கிறது'**[25]

இங்கே நூல் படித்து முடித்து வாங்கிய பட்டத்தையும், பட்டம் வேலை இல்லாததையும் குறிக்க வந்த காட்சிப் படிமங்களாகும்.

**'நடந்த நாடகங்கள்'** என்னும் கவிதை நூலில் காதலன் தான் காதலிக்கும் பெண்ணிடம் உன் மனதில் எனக்கு இடம் வேண்டும் என்றுக் கேட்கிறான்

**'நான்**

**கேட்கும் இடமெல்லாம்**

**நீ தலைவைக்கும் தூங்குகிற**

**தலையணையில் தான் '**[26]

இங்கே, தலையணை பெண்ணின் மனதிற்க்கு வந்த காட்சிப் படிமமாகும்.

## அவலம்

வருந்தத்தக்க நிகழ்வு, துன்பத்தை தரும் செய்திகள் அல்லது சொற்கள், இரங்கத்தக்க நிலையை வெளிப்படுத்தும் தன்மை அவலமாகும்.

**'நேரம்'** என்னும் கவிதையில் உயிரோடு இருக்கும் போது ஓடாத கடிகாரம் செத்த பிறகு சரியாக ஓடியது. நான் உன்னைக் காதலிக்கும் போது என்னை நீ காதலிக்கவில்லை. என் காதலை ஏற்கவில்லை, நான் வேறொரு பெண்ணைத் திருமணம் செய்து கொண்டப் பிறகு என்னை நீ காதலிக்கிறாய் என்று காதலன் தான் முன்பு காதலித்த காதலியிடம் கூறுவதாக வருகிறது பின் வரும் கவிதை,

**'உயிரோடு இருந்த போது**

**ஓடாத கடிகாரம்**

**செத்த பிறகு**

**ஓடத் தொடங்கியது**

**சரியாக..... '**[27]

இங்கே கடிகாரம் காதலைக் காட்சிப்படுத்தும் காட்சிப் படிமமாகும்.

**'முதுகில் ஒரு மூட்டை'** என்கிற கவிதையில் கல்வி வியாபாரமாகி போனதையும், ஏழைகள் கல்வி கற்க முடியாததையும், கல்வி நிறுவனங்களின் இலாபத்தைச் சுட்டிக் காட்டுகிறது. இலட்சுமியான பணம் இல்லாததால், சரஸ்வதியான **கலைவாணி** சோரம் போகிவிட்டாள். கல்வி வியாபாரமாயிற்று.

**‘லட்சுமி தன்னை**

**லட்சியம் செய்யாததால்**

**இங்கே**

**சரஸ்வதி மிகவும்**

**சங்கடப்படுகிறாள்!**

**கலைமகளின் வீணையை**

**ஏலம் போடுகிறார்கள்**

**அன்பான**

**அரசியல்வாதிகள்!’**[28]

இங்கே இலட்சுமி பணத்திற்கும், சரஸ்வதி கல்விக்கும், வீணை படிப்பிற்கும், அரசியல்வாதிகள் கல்வி நிறுவனங்களை நடத்துபவர்களையும் குறிக்கும் காட்சிப் படிமங்களாகும். இக்கவிதையில் கல்வியின் அவல நிலையைச் சுட்டிக்காட்டுகிறார் மு. மேத்தா.

**‘அடையாளம் தெரியாமல்’** என்னும் கவிதை சுதந்திரத்தின் அவலநிலையை விளக்குகிறது. இரவில் பெற்ற சுதந்திரம் இன்னும் வெளிச்சத்திற்கு வரவில்லையென்றும், நாங்கள் தேசத்தையும் சுதந்திரத்தையும் எங்களைக்காக்கும் பந்தலாய் நினைத்தோம் நீயோ அரசியல்வாதிகளால் கந்தலாய் கிழிந்துவிட்டாய் என்பதை பின் வரும் கவிதையின் மூலம் நிர்மலா சுரேஷ் அவர்கள் விளக்குகிறார்.

**‘ஊர்வலமாய்**

**வரவேண்டிய நீ**

**ஊரின் அவலமாய்**

**நிலைத்து விட்டாய் !**

**பந்தலாய்த் தான்**

**உன்னை இட்டோம்**

**நீ கந்தலாய்**

**ஏன் இப்படிக்**

**கிழிந்து விட்டாய் ![29]**

அவலம் சுதந்திரதிற்கும், பந்தல் மற்றும் கந்தல் தேசத்தையும் குறித்து வந்தக் காட்சிப் படிமங்கள்.

**சமயம்**

சமயம் என்பது மதங்களைக் குறிக்கும். இறைத் தத்துவத்தையும் ஆன்மீகத்தையும் அடிப்படையாகக் கொண்ட நெறிமுறையாகும்.

**'மனமே கோவில் மனிதனே தேவன்'** என்ற கவிதையானது மதங்களின் பெயரால் ஆலயங்கள் இடிக்கப்படுவதும் மக்கள் கொல்லப்படுவதையும் சுட்டிக்காட்டுகிறது. தொண்டர்களே தெரிந்து கொள்ளுங்கள், நீங்கள் தான் மதத்தின் பெயரால் சண்டையிட்டு உயிரை விட்டுக் கொண்டு இருக்கிறீர்கள். உங்களைத் தூண்டிவிடும் மதப் போதகர்கள் சுகமாகத் தான் உள்ளார்கள்.

**'தீபங்களே**

**நீங்கள்**

**தெரிந்து கொள்ளுங்கள்**

**திரிகள் மட்டுமே**

**கருகிக் கொண்டிருக்கின்றன**

**தூண்டு கோல்கள்**

**சுகமாகத்தூங்குகின்றன'[30]**

இங்கு தீபங்கள் தொண்டர்களையும், திரிகள் உயிரையும், தூண்டுகோல்கள் மதப் போதகர்களையும் காட்சிப்படுத்துகின்ற காட்சிப் படிமங்கள் ஆகும்.

## அரசியல்

ஆட்சி, அதிகாரம் பற்றிய கோட்பாடுகளும், நடைமுறைகளும், ஒரு அமைப்பு அணி போன்றவற்றில் அதிகாரத்தைக் குறிவைத்துச் செயல்படும் போக்கு அரசியலாகும். ஒரு நாடு நல்ல சட்டங்களால் ஆளப்படுவதை விட ஒரு நல்ல மனிதனால் ஆளப்படுவது பயனுடையது என்கிறார் சாக்ரடீஸ்.

காந்தியடிகளை கதாநாயகனாக வைத்துச் சுதந்திரம் என்ற திரைப்படம் எடுத்தார்கள், வினியோகஸ்தர்களுக்கு இலாபம், தயாரிப்பாளர்களோ நட்டத்தில் வாடுகிறார்கள்.

**'காந்தி மகானைக்**
**கதா நாயகனாய்ப் போட்டுக்**
**கறுப்பு வெள்ளையில்**
**சுதந்திரம் என்றொரு**
**திரைப்படம் எடுத்தோம்.**
**வினியோகஸ்தர்களுக்கு**
**வெகுவான லாபம் –**
**படமெடுத்தவர்கள் தான்**
**பட்டினி கிடக்கிறோம் !'**[31]

தேர்தலில் மக்கள் அரசியல்வாதிகளுக்கு வாக்களித்தார்கள் துயர் நீங்கும் என்று நம்பினார்கள் இன்று வரை அவர்களின் துயரம் நீங்கவில்லை. இங்கே காந்தியடிகள் சுதந்திரத்திற்கும், திரைப்படம் தேர்தலையும், வினியோகஸ்தர்கள் அரசியல் வாதிகளுக்கும், படமெடுத்தவர்கள் மக்களுக்கும் காட்சிப்படுத்திய காட்சிப் படிமங்களாகும்.

## அலங்காரம்

அலங்காரம் என்பது அழகுபட ஒன்றை வருணிப்பதற்குப் பயன்படுகிறது. அழகில்லாத காக்கையானாலும் அலங்காரப் படுத்தினால் அழகாகத் தோன்றும்.

இலக்கணத்திற்கு அலங்காரமாய் இருப்பது அணி, கவிதைக்கு அலங்காரமாய் இருப்பது படிமம்.

**'ஆகாயப் பந்தலின்**

**நிலாப் பழத்தை'**[32]

ஆகாயம் பந்தலுக்கும், நிலா பழத்துக்கும் அலங்காரத்திற்கு வந்த காட்சிப் படிமமாகும்.

**'நாளை'** என்ற கவிதையில் வரும் வாசகங்கள், உலக வீதிகளில் ஆயுதங்கள் ஊர்வலம் செல்கிறதாம் வீட்டிற்குள் ஒளிந்தபடி எட்டிப் பார்கிறான் என்ன நடக்கும் என்று. நாளை என்ற சொல் மறைந்து வந்து இருக்கிறது.

**'உலக வீதிகளில்**

**ஊர்வலம் போகும்**

**ஆயுதங்கள்**

**வீடுகளுக்குள் ஒளிந்தபடி**

**எட்டிப் பார்க்கும்**

**மனிதன்'**[33]

ஊர்வலம், வீதிகள், ஆயுதங்கள், நாளை என்பதை அலங்காரமாய்க் காட்சிப்படுத்தும் படிமங்கள்.

**'நிலா, வானம், நட்சத்திரம்'** என்னும் கவிதையில் அலங்காரப் பொருளாய் இக்கவிதைக் காட்சிப்படுத்துவதாக வருகிறது. சிகப்பு விளக்கு வீதியில் ஒரு அழகிய பெண் நிற்பதாக இக்கவிதை கூறுகிறது. சிகப்பு விளக்கு வீதியில் சென்று கொண்டிருந்தவன் வானத்தைப் பார்க்கிறான், அங்கே வெள்ளை விளக்காக நிலவு தெரிகிறது. வானத்தில் இருக்கும் நட்சத்திரக் கூட்டத்தில் அமைதியாய் நிற்கும் பெண்ணாக நிலவு அவனுக்குத் தோன்றுகிறது.

**'சிகப்பு விளக்கு**

**வீதியில்**

**சென்று கொண்டிருந்தவன்**

**அண்ணாந்து**

**பார்த்தால்**

**ஆகாயத்தில்**

**ஒரு**

**வெள்ளை விளக்கு**

**வீதி !**[34]

இங்கே வெள்ளை விளக்கு நிலவையும், குலுக்கி மினுக்குப் பெண்ணாக நட்சத்திரங்களையும் அலங்காரமாய்க் காட்சிப் படுத்தும் காட்சிப்படிமமாகும்.

**'வீதியில் தொலைந்த விலாசம்'** என்னும் கவிதையில் 16 வயது பெண் பட்டாடை உடுத்திய வாகனமாய்க் காட்சித் தருகிறாள்.

**'அவளோ**

**பட்டாடை கட்டிய**

**பருவ வாகனம்'**[35]

இக்கவிதையில் பெண்ணை வாகனமாகக் காட்சிப்படுத்தி உரைநடையில் வந்த காட்சிப் படிமமாகும். பெண்ணை உயிர் அற்ற பொருளுக்கு அலங்காரம் செய்துள்ளது இக்கவிதை.

**'பாவேந்தர் ஒரு நிலா'** என்ற கவிதையில் நிலவு என்னும் பெண் ஆயிரம் பூக்களைச் சூடி இருந்தாலும் இரவு என்னும் பெண் பாவேந்தரின் கவிதைகளால் தான் அர்த்தமுள்ளவளாகிறாள்.

**'நிலவே!**

**ஆயிரம் பூச்சூடி இருந்தாலும்**

**இரவுப் பெண்**

**உன்னால் தான்**

**அர்த்தமுள்ள வளாகிறாள்![36]**

இரவைப் பெண்ணாக அலங்காரப்படுத்தியும், உன்னால் என்ற சொல் பாவேந்தரையும் அலங்காரமாய்க் காட்சிப் படுத்தும் காட்சிப் படிமமாகும்.

நிலவே உன்னை அறிந்து கொண்டவருக்கு நீயோ அகநானூறு. **'ஒரு ஒழுங்கு முறையில் தொகுக்கப்பட்ட ஒரே தொகை நூல் அகநானூறு. தொகுத்தவர் உருத்திர சன்மர், தொகுப்பித்தவன் பாண்டியன் உக்கிரப்பெருவழுதி.'[37]** உன்னைப் புரிந்து கொள்ள மறுத்தவருக்கு நீயோ புறநானூறு. **'அறம், பொருள், இன்பம் என்ற மூன்றையும் பாடும் புறநானூறு தொகுத்தவன், தொகுப்பித்தவன் பெயர் தெரியவில்லை.'[38]**

**'நிலவே**

**புரிந்து கொள்ள**

**மறுத்தவர்க்கு நீ**

**புறநானூறு!**

**அறிந்து கொண்ட**

**மனங்களுக்கோ**

**நீ என்றும்**

**அகநானூறு தான்!'[39]**

இங்கே நிலவு பாவேந்தரையும், புறநானூறு ஒழுங்கு முறையின்மையும், அகநானூறு ஒழுங்கு முறையையும் அலங்காரத்திற்கு வந்தக் காட்சிப் படிமமாகும்.

## கவிஞனும் கவிதையும்

கவிதை என்பது உள்ளத்து உணர்ச்சிகளைச் செறிவாகவும் சுருக்கமாகவும் சொல்வது. உணர்ச்சியைச் சிந்தனையுடன் கலந்து வெளிப்படுத்தும் ஓர் ஊடகம்,

சமுதாயத்தில் நிகழும் நிகழ்ச்சிகளின் தீவிர உணர்வின் வெளிப்பாடுகள் தான் கவிதை.

கவிஞன் சமூகத்தில் காணும் அவலங்களைத் தன் கவிதையின் மூலம் வெளியிடுகிறான். **"எந்தக் கலைஞனும் வாழ்க்கையைச் சிந்திரிக்கும் போது அவன் தன்னை அறியாமலே தன்னை வெளிப்படுத்துகிறான். தான் நம்பும் கொள்கையும் தத்துவத்தையும் வெளியிடுகிறான்."**[40] சமுதாய உணர்வோடு கூடிப் படைக்கும் எந்தக் கவிஞனுடைய படைப்பிலும் அவனுடைய சமுதாயக் கொள்கை, தத்துவம், கோட்பாடு ஆகியவை அவனையும் மீறி அவனுடைய இலக்கியங்களில் நிழலாடுவதைக் காண இயலும்.

**'விழாக் காலம்'** என்ற கவிதை கவிஞனுக்கு மரணம் என்பதே கிடையாது. அவன் இறந்தாலும் அவன் கவிதைகள் வாழ்கின்றன. கவிதையால் அவன் உயிர் வாழ்கிறான் என்ற கருத்தைக் கூறுகிறது. கவிஞனுக்கு மரணம் வரும் அவன் எழுதிய கவிதைகளுக்கு மரணமில்லை. கவிஞன் இறந்த பின்பும் அவன் கவிதைகள் வாழ்கின்றன. கண்ணதாசன் அவர்கள் 'ஒரு கோப்பையிலே என் குடியிருப்பு' என்று தொடங்கும் பாடலில் 'நான் நிரந்தரமானவன் அழிவதில்லை எந்த நிலையிலும் எனக்கு மரணமில்லை' என்று பாடுகிறார். இக் கருத்தையே மு. மேத்தாவும் கூறுகிறார்.

**'கவிஞன் மரித்த பின்**
**உயிர்த் தெழுந்தன**
**கவிதைகள்!'**[41]

கவிஞன் இறந்த பின் உயிர்த்தெழுந்தன என்ற வரிகள் கவிஞனுக்கு மரணமில்லை என்பதைக் காட்சி ஆக்குகின்ற காட்சிப் படிமமாகும்.

**'இனியதொரு விதி செய்வோம்'** என்ற கவிதை ஒருவருக்கு ஏற்படும் வெற்றித் தோல்விகளை குறித்து விளக்குகிறது. மகாபாரதத்தில் அர்ச்சுனன் வில்

வித்தையில் சிறந்தவன், அர்ச்சுனனையே வென்றவன் ஏகலைவன், அர்ச்சுனனின் குருவான துரோணாசாரியாரை மானசீக குருவாய் கருதித் தானே வில் வித்தையைக் கற்றவன் ஏகலைவன். அர்ச்சுனனின் தோல்வித் துரோணருக்கு மன வருதத்தைத் தரவே, சூழ்ச்சியால் ஏகலைவனிடம் சென்றுக் குருதட்சிணையாக ஏகலைவனின் இரண்டு கட்டை விரல்களைப் பெறுகிறார். குருகுலக் கல்வியில் தொடங்கி கலியுகம் வரை நீடிக்கிறது இந்த அவலநிலை. ஆரம்ப பள்ளிகளில் தொடங்கி சட்ட சபை வரைக்கும் இந்த அவலநிலை தொடர்கிறது. ஒருவரின் தலைவிதியை நிர்ணயிப்பது கல்விக்கூடங்கள் என்கிறார் ஜே. கிருஷ்ணமூர்த்தி அவர்கள். நமக்கு ஏற்பட்ட கடந்தகாலத் தோல்விகளை மறந்து விட்டு வெற்றியை நோக்கி செல்வோம். தகுதியுடையவர்களை வெற்றி வந்து சேராவிட்டால் வெற்றிகளுக்கும் நாம் வழக்கு போடுவோம் நீதி மன்றத்தில் என்று மேத்தா அவர்கள் பின் வரும் கவிதையில் கூறுகிறார்.

'இனியாவது
கடந்த காலச்
செருப்புகளைக்
கழற்றி எறிவோம்
எதிர் காலத்திற்கான
சிறுகுகளைச் சேகரிப்போம்!

தோள்களைப் பிடித்துத்
தொங்கி கொண்டிருக்கும்
தோல்விகளை நாம் துரத்தியடிப்போம்!

தகுதியுடைவர்களைத்
தேடி
வந்து சேராவிட்டால்
வெற்றிகளுக்கும்

போடுவோம்

**ஒரு விசாரணைக் கமிஷன்'**[42]

இங்கே செருப்புகள் தோல்விகளுக்கும், சிறகுகள் வெற்றிக்கும், விசாரணைக் கமிஷன் நீதிமன்றத்திற்கும் படிமங்களாக வந்துள்ள காட்சிப் படிமமாகும்.

**'ஊர்வலம்'** என்கிற கவிதைக் கவிஞனின் வாழ்வில் ஏற்படும் போராட்டங்களையும் வெற்றித் தோல்விகளையும் விளக்குகிறது. எங்களுக்கு வயதாகிவிடவில்லை தோல்விகள் எங்களுக்குச் சரளைக் கற்கள் நாங்கள் மலைகளில் ஏறி பயணித்து வந்து விட்டோம், சரளைக் கற்கள் எங்களுக்கு சாதாரணமாகும் என்று பின் வரும் கவிதை கூறுகிறது,

**'மீண்டும் நான்**

**வாழ்ந்து பார்க்கிறேன்**

**எனக்கு**

**வயதாகி விடவில்லை!**

**கைவரை வந்து**

**காணாமற் போகும்**

**வெற்றிகளே!**

**என்**

**கால்களில் தளையாய்**

**கனத்துக் கிடக்கிற**

**தோல்விகளே!**

**மலைகளில் ஏறித்**

**திரும்பியவனை**

**சமவெளியில்**

**உருள வைத்த**

**சரளைக் கற்களே!'**[43]

இங்கே கற்பனைகள் – மலைகள், சமவெளிகள், சரளைக் கற்கள் படிமங்களாக வந்துள்ளன. சரளைக்கற்கள் தோல்விகளுக்கும், மலைகள் கற்பனைக்கும், சமவெளிகள் வாழ்க்கைக்கும் வந்து காட்சிப்படுத்திய காட்சிப் படிமங்களாகும்.

## முடிவுகள்

**'சுருங்கச் சொல்வதே பேச்சுத் திறனின் உயிர் நாடி '** என்கிறார் ஷேக்ஸ்பியர். அது போல கவிதையில் சுருக்கமாக சொல்லி விளங்க வைப்பது படிமமாகும். படிம இயக்கத்தின் தந்தையாக விளங்குபவர் எக்ஸ்ரா பவுண்டு அவர்கள். தமிழகத்தில் முதல் படிம கவிஞராக திகழ்பவர் பிரமிள் என்று அழைக்கப்படும் தருமு சிவராமு ஆவார். அவரைப் பின் பற்றி மு. மேத்தா அவர்கள் படிமங்கள் மூலம் சிறப்பான கவிதைகள் தந்துள்ளார். அவர் கவிதையில் அரசியல் வாதிகளின் போக்கும், பெண்களின் நிலைகள், மதங்களின் வெறிகள், சுதந்திரப் போராட்ட தியாகிகளின் தியாகங்கள் போன்றவற்றைக் காட்சிப் படிமங்களின் மூலம் படிப்போரின் மனதில் காட்சிப் படுத்துகிறார்

மு. மேத்தாவின் கவிதைகளில் காட்சிப் படிமங்கள், குறியீடுகள், குறியீட்டு படிமங்கள், தொன்மங்கள், உவமைப் படிமங்கள் காணப்படுகின்றன. கவிதையில் முற்றிய உவமைகள் காட்சிப் படுத்தும் போது அவை உவமைப் படிமங்களாய் மாறுகின்றன. ஒரு பொருளை குறித்த குறியீடு காட்சிப் படுத்தும் போது அவைக் குறியீட்டுப் படிமமாகிறது.

முதலாம் இராசேந்திர சோழனால் அமைக்கப் பெற்ற கங்கை கொண்ட சோழ ஈஸ்புரத்தில் சோழச் சிற்பக் கலையின் உன்னத நிலையினைக் காணமுடிகிறது. அங்குள்ள செளர பீடங்களுக்குக் கீழ் **'அடித்தளமானது ஏழு குதிரைகள் இழுத்துச் செல்லும் இரதத்தின் கோலம் போல உருவாக்கப் பெற்றுள்ளது. குதிரைகள் ஏழும் வாரத்திலுள்ள ஏழு நாட்களையும் அடையாள பூர்வமாக உணர்த்தும். சக்கரங்கள் ஒவ்வொன்றிலும் அமைந்த தாமரை இதழ் போன்ற 12 சட்டங்களும் 12 மாதத்தைக்**

**குறிக்கும்'**[44] இதில் ஏழு குதிரைகள் வார நாட்கள் ஏழையும், 12 சட்டங்கள் 12 மாதத்தையும் உணர்த்தும் காட்சிப் படிமங்களாகும். சூரியன் உதிக்க வில்லை என்றால் உலகில் எந்த நிகழ்வும் நிகழாது என்பதைக் குறிப்பதால் இது சற்று மாற்றம் பெற்று குறியீட்டுப் படிமமாகவும் இது மாறுகிறது.

# அடிக்குறிப்பு

1. பொன்மணிவைரமுத்து, சங்க இலக்கியத்தில் புதுக்கவிதைக் கூறுகள், ப.23
2. அலேக்கஸ் பிரிமியர், பிரின்ஸ்டன் என்சைக்லோபிடியாஆப் பொயட்ரி அண்ட் பொயடிக்ஸ், ப.363
3. பொன்மணிவைரமுத்து, முன்னூல்,ப.312
4. சி. இராஜேந்திரன், திருக்குறள் உவமை நயம், ப.19
5. மு. சுதந்திரமுத்து, படிமம், ப.57
6. மு. மேத்தா, கண்ணீர் பூக்கள், ப.29
7. மு. மேத்தா, காத்திருந்த காற்று, ப.22
8. மு. மேத்தா, நடந்த நாடகங்கள், ப.9
9. இந்துமதி, தமிழேந்தி கவிதைகள் – ஓர் ஆய்வு , ப.46
10. மு. மேத்தா, அவர்கள் வருகிறார்கள், ப.63
11. கம்பராமாயணம், பால காண்டம் (மிதிலைக் காட்சி 35)
12. மு. மேத்தா, க.பூ., ப.45
13. மேலது, ப.46
14. மு. மேத்தா, ந.நா., ப.78
15. மு. மேத்தா, ஆகாயத்துக்கு அடுத்த வீடு.
16. மு. மேத்தா, க.பூ., ப.82
17. மு. மேத்தா, ஆ.அ., ப.
18. மேலது, ப.34
19. மு. மேத்தா, என்னுடைய போதிமரங்கள், ப.19
20. மு. மேத்தா, இதயத்தில் நாற்காலி, ப.72
21. மு. மேத்தா, ந.நா., ப.49
22. மேலது, ப.50
23. மேலது, ப.69
24. மு. மேத்தா, கனவுக் குதிரைகள், ப.31

25. மு. மேத்தா, இதயத்தில் நாற்காலி, ப.40

26. மு. மேத்தா, ந.நா., ப.22

27. மு. மேத்தா, ஆ.அ., ப.40

28. மு. மேத்தா, ஒரு வானம் இரு சிறகு, ப.22

29. நிர்மலா சுரேஷ், பாலைவனப் பௌர்ணமிகள், பக்.74,75

30. மு. மேத்தா, க.கு., ப.22

31. மு. மேத்தா, அ.வ., ப.73

32. சிற்பி, புன்னகை பூக்கும் பூனைகள், ப.25

33. மு. மேத்தா, எ.போ.ம, ப.28

34. மு. மேத்தா, ஊர்வலம், ப.57

35. மு. மேத்தா, முகத்துக்கு முகம், ப.26

36. மேலது ப.26

37. இரா. இராசேந்திரன், தமிழ் இலக்கியத் தகவல் களஞ்சியம், ப.58

38. மேலது, பக்.60,61

39. மு. மேத்தா, முகத்துக்கு முகம், ப.30

40. சரளா ராச கோபாலன், இலக்கியம் ஒரு பார்வை, ப.32

41. மு. மேத்தா, ஆ.அ., ப.40

42. மு. மேத்தா, க.கா., ப.40

43. மு. மேத்தா, ஊர்., ப.13

44. சி. பத்மநாதன், இந்து கலாச்சாரம் – கோயில்களும் சிற்பங்களும், ப.197

# இயல் - 3

## மு. மேத்தாவின் கவிதைகளில் குறியீட்டுப் படிமங்கள்.

கவிதை என்பது உள்ளத்து உணர்ச்சிகளைச் செறிவாகவும் சுருக்கமாகவும் சொல்வது. கவிதை என்பது உணர்ச்சியைச் சிந்தனையுடன் கலந்து வெளிப்படுத்தும் ஓர் ஊடகம், சமுதாயத்தில் நிகழும் நிகழ்ச்சிகளின் தீவிர உணர்வின் வெளிப்பாடு தான் கவிதை. கற்பனையின் வடிவமே கவிதை என்கிறார் ஷெல்லி. நம் உணர்ச்சியின் உண்மை, வடிவங்கள் ஆகிய வற்றிலிருந்து விலகி நிற்பதே கவிதை என்கிறார் டி. எஸ். எலியட்.

கவிதை ஒவ்வொரு காலத்திலும் ஒவ்வொரு மாதிரியும் ஒவ்வொரு விதமாகவும் வளர்ச்சி பெற்றும் மாற்றம் அடைந்தும் வந்துள்ளது. மரபு என்னும் பெயரில் கட்டுப்பட்டிருந்தது, இலக்கணத்துக்குட்பட்டிருந்தது. பாரதியின் வருகைக்குப் பிறகே கவிதையில் மாற்றம் ஏற்பட்டது. மரபிலிருந்து விடுதலைப் பெற்றது, புதுக்கவிதையின் போக்கிலும் மாற்றம் ஏற்பட்டது.

**'இலகுக் கவிதை, கட்டிலடங்காக் கவிதை, வசனக் கவிதை, உரைவீச்சு, மாடர்ன் பொயட்ரி, நியூ பொயட்ரி என்ற பல பெயர்களுடன் வலம் வரும் புதுக்கவிதையின் தோற்றத்தையும் வளர்ச்சியையும் இங்கு காணலாம்.**

**"சுவைபுதிது பொருள் புதிது வளம் புதிது**

**சொற்புதிது சோதி மிக்க**

**நவகவிதை "**

**என்று பாரதி பாடியபடி, பாடு பொருள், வடிவம், பழைய மரபை மீறி எளிதாக மக்கள் மனதில் பதியும் தன்மை என அனைத்தும் புதிதாக அமைந்திருப்பதால் 'புதுக்கவிதை' என்று பெயர் இவ்வகைக் கவிதைக்கு நிலையான புகழ் சேர்க்கின்றது.'**[1] படிமம், குறியீடு என ஓர் அலங்காரத்தை ஏற்படுத்திக் கொண்டு அவைகளுடன் சிக்கு முண்டது, சிறப்பும் பெற்றது, குறியீட்டின் ஒரு வடிவமே

படிமம் என்றாலும் படிமத்துக்கு ஒரு தனித்தன்மை உண்டு. படிமம் கவிதையை ஒரு படி உயர்த்தியது என்று திட்டவட்டமாகக் கூறலாம்.

## படிமம்

படிமம் என்பது சொற்களால் வாசகனின் மனதில் கவிஞனால் வரையப்படும் ஓவியம். ஒரு வர்ணனையே கூடப் படிமம் தான். ஆனால் உவமை, உருவகம், தொன்மம் ஆகியவற்றைப் பயன்படுத்தி எழுதும் கவிதை ஒரு அழகான படிமமாய் உருவாகிறது. படிமங்களைப் பொருத்தவரை பாரதியாலும் அதற்கு முந்தைய காலகட்டக் கவிஞர்களாலும் படிமம் பயன்பாடுகளைக் காண முடியும். பாரதியின் அக்கினிக் குஞ்சு கவிதையில்,

**"அக்னிக் குஞ்சொன்று கண்டேன் அதை**

**ஆங்கோர் காட்டிடை பொந்தினில் வைத்தேன்**

**வெந்து தணிந்தது காடு "[2]**

என்ற வரிகளில் அக்கினிக் குஞ்சொன்று பெருங் காட்டை எரித்து அழித்ததைக் கூறும் பாரதியின் கவிதை சிறு நெருப்புத் துண்டும் பெருங்காட்டை அழிக்கப் போது மானதாகும் என்ற கருத்தை தருவதோடு இளையவனாயினும் வீரனாக இருக்கும் போது பெருங்கூட்டமான பகையவர்களையும் அழிக்க முடியும் என்ற கூடுதலான பொருளைத் தருகிறது. இங்கே அக்கினிக் குஞ்சு இளைஞனையும், காடு பகைவர்களையும் குறிக்கும் படிமங்களாகும்

## குறியீடு

ஒன்றை வேறொன்றால் குறிப்பது என்பதே குறியீட்டின் அடிப்படை இலக்கணமாகும். கவிதையில் குறியீடு குறிக்கப்படும் பொருளை மறை முகமாகக் குறிப்பாகவே உணர்த்தும். வேறொன்றைக் குறிப்பதோடு மட்டுமில்லாமல் கவிதைக் குறியீடு தன்னையும் உணர்த்திக் குறிக்கப்படும் பொருளோடு

இணைந்தும் நிற்கும். மரபுறவு, ஒப்புறவு, தற்செயலாக நிகழ்கிற அல்லது கவிஞர்கள் உண்டாக்குகிற ஒட்டுறவு ஆகியவற்றின் அடிப்படையில் கவிதையில் குறியீடு பிறக்கின்றது. உணர்வைத் தூண்டுவது கவிதைக் குறியீட்டின் நோக்கமாதலின் புலனுணர்வுப் படிமங்கள் சிறந்த குறியீடாகின்றன. உலகியல் உணர்வுகளை வெளிப்படுத்தவும், ஆன்மீக உணர்வுகளை வெளிப்படுத்தவும் குறியீடுகள் பயன்படுகின்றது. **‘குறியீடு முரண்பட்ட இரு நோக்கங்களுக்குப் பயன்படுத்தப்படுகிறது. சொற்களில் விவரிக்க முடியாதவற்றைப் புலப்படுத்துவதற்குக் குறியீடு பயன்படுவதோடு, சில சூழ் நிலைகளில் மறைக்க வேண்டியதை மறைத்துக் கூறுவதற்கும் பயன்படுகிறது. இவையே கவிதைக் குறியீட்டின் வரை விலக்கணமாகக் கொள்ளத்தக்கன.’**[3] என்று அப்துல் ரகுமான் கூறுகிறார்.

## குறியீட்டின் வகைகள்

இலக்கியத்தில் பொதுவாகக் கவிஞர்கள் உலகில் தொன்று தொட்டு வழங்கப்படும் குறியீடுகளைப் பயன்படுத்துவர்; அல்லது தம் வசதிக்கேற்ப புதிய குறியீடுகளைப் படைத்துக் கொள்வர். எனவே குறியீடுகள் ‘**பொது நிலைக் குறியீடுகள்**’ மற்றும் ‘**தனிநிலைக் குறியீடுகள்**’ என இருவகையாக அமைகின்றன. பொது நிலைக் குறியீடுகள் அனைவரும் அறிந்த தெரிந்து இருக்கக் கூடிய மரபுப் பொருளில் உலகெங்கும் வழங்கி வரும் சொற்களாகும். இதனை இயற்கைக் குறியீடுகள் என்றும் அழைக்கலாம். யூங் என்பவர் விளக்கிய மூலமாதிரிப் படிமங்களும் இவ்வகையில் அடங்குகின்றது.

**‘பூவின் பெயர் நிலத்திற்காகி, அந்நிலத்து ஒழுக்கத்திற்கானதாகக் கருதுவதே பொருத்தமுடையது. பின்னர் இப்பெயர் அவ்வுரிப் பொருள் பற்றிய பாடலுக்கும் பெயராகியது.’**[4] பூவின் பெயர் நிலத்திற்கு வழங்கி வந்து பின்னர் அந்நிலத்தில் வாழும் மக்களின் ஒழுக்கத்தைக் குறியீடாக காட்டுகிறது.

பொதுநிலை குறியீடுகளில் ஒரு குறிப்பிட்ட நாடு, இனம் பண்பாட்டிற்குப் பொதுவாக வழங்கும் குறியீடுகள் உண்டு ஆகையால் உலகனைத்திற்கும் உரியவற்றை **'அகிலத்துவக் குறியீடுகள்'** என்றும் குறிப்பிட்ட பண்பாட்டிற்கு சொந்தமான குறியீடுகளை **'வழக்குக் குறியீடுகள்'** என்றும் அழைக்கலாம்.

கவிஞனால் படைக்கப்படும் தனிநிலைக் குறியீடுகள் பல வகையில் அமைகின்றன. சில பொருள்கள் கவிதைகளில் குறிப்பிட்ட சூழலில் ஆளப்படும் போது அவற்றோடு இடம் பெறுகின்ற பிற பொருட்களும் உள்ளார்ந்த தொடர்பைப் பெற்றுக் குறியீடுகளாவதுண்டு, குறிபிட்ட தருவாயில் இவை குறியீடாக அமைவதால் இவற்றைக் **'தருவாய்க் குறியீடுகள்'** என்கிறார் அப்துல் ரகுமான் அவர்கள். மேலும் கவிஞர்களால் கையாளப்படும் சில தனிப்பட்ட முறைகளினாலும் குறியீடுகள் பிறக்கின்றன. ஒரு படிமம் அல்லது உருவகம் குறிப்பிட்ட பொருளைக் குறிக்கும் வகையில் திரும்ப திரும்ப பயன்படுத்தப்பட்டால் அவை குறியீட்டு தன்மையை அடைந்துவிடும். இவ்வாறு மீண்டும் மீண்டும் ஆளப்படுவதால் இவற்றை **'மறிதரு குறியீடுகள் என்கிறார். இதைப் போலவே கவிஞர்கள் தாமே உருவாக்கும் குறியீடுகளைத் தற்குறியீடுகள்' என்கிறார். 'தருவாய்க் குறியீடுகளும், தற்குறீயீடுகளும் தனி நிலைக் குறியீடுகள் என்ற பிரிவில் அடங்கும்.'**[5] என்கிறார்கள் வெல்லக்கும் வாரனும். மேலும், இவர்கள் குறியீடுகளை மூன்று வகையாக பிரித்தனர். மரபுக் குறியீடுகள், தற்குறியீடுகள் மற்றும் இயற்கைக் குறியீடுகளாகும்.

**'இயல்பாகவே குறியீடுகளாக அமைந்து ஆன்மிக மெய்மைகளை உணர்த்தப் பயன்படுவன வற்றைத் 'தூய குறியீடுகள்' என்றும், கருத்துக்களைப் புலப்படுத்தத் திட்டமிட்டு உருவாக்கப்படுவனவற்றைத் 'திட்டமிட்ட குறியீடுகள்' என்றும் சொல்வதுண்டு. சாட்விக் குறியீடுகளை, உலகியற் பயனுக்குதவும் 'மானுடக் குறியீடுகள் என்றும் அறிவெல்லை கடந்த உண்மைகளை உணர்த்தும் 'கடப்பியக் குறியீடுகள் என்றும் வகைப்படுத்துகிறார். கருத்துக்களை மட்டும் உணர்த்துவன**

**'அறிவு நிலைக் குறியீடுகள்' என்றும் உணர்வுகளைக் கிளர்வன 'உணர்வு நிலைக் குறியீடுகள் என்றும் ஏட்ஸ் பிரித்துக் காண்கிறார். இவ் வகைகள் அனைத்தையும் மேலே காட்டிய பொது நிலை, தனி நிலை இரண்டிலும் அடக்கலாம்.'**[6]

## குறியீட்டுப் படிமம்

உவமானம் ஓர் உவமேயத்திற்குத் திரும்ப திரும்ப ஒப்பீடாக வருவதும், ஒப்பீடு செய்யும் போது உவமானத்தை மட்டும் குறிப்பிட்டுவிட்டு உவமேயத்தைக் குறிப்பிடாமலேயே உணர்த்துவதும் குறியீடுகளாகும். எனவே படிமம்,

1. ஒரே படிமம் திரும்ப திரும்ப வருதல்
2. ஒரு படிமக் காட்சி இன்னொரு கருத்தை உணர்த்தல் என்னும் இருவகையில் குறியீடாகிறது.

**'படிமத்தை பயன்படுத்தும் கவிஞன் பெரும்பாலும் ஒரு பொருளின் மூலமாகத் தான் கருத்தை வெளிப்படுத்துகிறான். கருத்துப் பொருளைக் காட்சிப் பொருளாகுதல் என்ற அடிப்படையில் குறியீடு படிமக் கொள்கையில் தான் உருவாகிறது.'**[7] என்கிறார் சுதந்திரமுத்து.

### அ. திரும்ப வருதல்

ஒரே ஒப்பீடு திரும்ப திரும்ப வந்து குறியீடாவதை மறிதரு படிமம் எனலாம். புரட்சியை யாகம் என்று ஒப்பிட்டுக் காட்டுவதும், அடிக்கடி இவ்வொப்பீடு நேரும் போது யாகம் என்றவுடன் புரட்சி நினைவுக்கு வந்து விடுகிறது. **'குறிப்பிட்ட படிமத்தின் மீது ஏதோ ஒரு வகையில் ஏற்படும் சிறப்பான ஈடுபாடே இதன் பிறப்புக்குக் காரணமாகிறது. ஜோசப் வாரன் பீச் இவற்றை பீடிக்கும் படிமம் என்கிறார்.**

### ஆ. இன்னொன்றைக் குறித்தல்

ஒரு படிமக் காட்சி வழி குறியீட்டை உணர்த்துகிற முறையில் படிமம் பொதுவாகக் கொள்பவருக்கும் படிமமாகவும் ஆழ்ந்து கவனிப்பார்க்குக்

குறியீடாகவும் தோற்றத்தைத் தரும். கவிதைப் தலைப்பிலோ அல்லது பிற வகையிலோ அவை குறியீடு என்பதற்கான குறிப்பிருக்கும் குறிப்பின்று இருப்பின் அது வெறும் படிமம் தான் என்கிறார் சுதந்திரமுத்து அவர்கள்.

'விளக்கைச் சுற்றும் விட்டில் என்ற பழமொழியை வைத்து அமைந்த ஒரு கவிதையில் விளக்கும், விட்டிலும் படிமமாக வெளிப்படுகின்றன.

தீப மரத்தின்

தீக்கனி உண்ண

விட்டில் வந்தது

கனியோ விட்டிலை

உண்டது ( அப்துல் ரகுமான், பால் வீதி, ப.இ )

என்ற ஒரு முரண்பாட்டை இக்கவிதை புலப்படுத்துகிறது. தீபத்தை மரமாகவும் தீயைக் கனியாகவும் உருவகப் படுத்திய படிமங்கள் முதலில் கிடைக்கின்றன. கனி பறித்து உண்ண மரத்தைச் சுற்றுகிற அனுபவம், விளக்கைச் சுற்றும் விட்டிலின் தோற்றத்தைத் தெறிவுப்புடுத்துகிறது. ஆனால் விளக்கு, விளக்கு தானா ? தீ இந்தியாவையும் விட்டில் உழைக்கும் மக்களையும் குறிக்க வரும் குறியீடுகள் என்று உணருகிற போது படிம அனுபவம் தாண்டி நாம் வேறு ஒரு கருத்தனுபவம் பெறுகிறோம். இங்கு படிமம், உணர்வுப் பூர்வமாக இக்கருத்தை நம் உள்ளத்தில் ஏற்ற உதவுகிறது.'[9]

## மு. மேத்தாவின் கவிதைகளில் குறியீட்டு படிமங்கள்

மு. மேத்தா அவர்களின் கவிதைகளில் காதல், தொன்மம், அரசியல், வாழ்த்து, காப்பியம், வருத்தம், சுதந்திரம் ஆகியவை பற்றியக் கருத்துக்கள் குறியீட்டு படிமங்களாக காணப்படுகின்றன.

## சுதந்திரம்

மனிதன் பிறக்கிற போதே அவனுடன் சில உரிமைகளும் பிறக்கின்றன. அந்த உரிமைகளை அரசியல் காரணங்களினாலும் பொருளாதாரக் காரணங்களினாலும் நாளாவட்டத்தில் அவன் இழந்து விடுகிறான். இழந்து விட்டதை மீண்டும் பெற அவன் முயற்சி செய்கிறான் அதைத்தான் சுதந்திர முயற்சி என்றும், சுதந்திர புரட்சி என்றும் பல பெயர்களிட்டு அழைக்கிறோம் மனிதன் சுதந்திரத்தோடு பிறக்கிறான், ஆனால் எங்கும் கட்டுண்டு கிடக்கிறான் என்று ரூஸோ அவர்கள் 'சமுதாய ஒப்பந்தம்' என்னும் நூலில் சுதந்திரம் என்பதற்கு விளக்கம் தருகிறார்.

**'கண்ணீர் பூக்கள்'** என்ற கவிதை நூலில் மு. மேத்தா அவர்கள் சுதந்திரம் இன்றும் மக்களுக்கு கிடைக்கவில்லை என்பதனை **'தேசப்பிதாவுக்கு ஒரு தெருப் பாடகனின் அஞ்சலி'** என்ற கவிதையில் காந்தியடிகள் ஆங்கிலேயரை எதிர்த்துப் போராடி சுதந்திரத்தைப் பெற்றுத்தந்தார். ஆனால் மக்கள் இன்றும் அடிமைகளாகவே உள்ளனர். இது எப்படி நேர்ந்தது ? இதை யார் செய்தது ? என்றுக் கேள்விகளை எழுப்புகிறார் மேத்தா.

**"கண்ணீர் கடலில்**
**கலங்கள் மூழ்கிய பிறகு**
**அடைக்கலம் தேடிய**
**ஆபுத்திரனே!**

**அமுத சுரபியைத்தான்**
**நீ தந்து சென்றாய்**
**இப்போது**
**எங்கள் கைகளில் இருப்பதோ**
**பிச்சைப் பாத்திரம்!**

**இந்த**
**மாற்றத்தை நிகழ்த்திய**

**மந்திரவாதிகள் யார் ?**

**நிழலுக்குள் மறைந்திருக்கும்**

**நிழலை**

**யார் அம்பலப்படுத்துவது ?"[10]**

ஆபுத்திரன் காந்தியடிகளையும், அமுத சுரபி சுதந்திரத்தையும் குறிக்கும் படிமங்களாகும். இதில் அமுத சுரபி மணி மேகலையை நினைவுப் படுத்துகிறது. இரட்டைக் காப்பியங்களில் ஒன்றான மணிமேகலையை நம் நினைவுக்கு கொண்டு வந்து காட்சிப் படுத்தியதால் இது குறியீட்டு படிமமாகிறது. அமுத சுரபி வளத்தைக் குறிக்கும் குறியீடாகும்.

**'மாம்பழ ஊரில் மனக் குயில்கள் அழுகின்றன'** என்ற கவிதையில் மேத்தா அவர்கள் காந்தியடிகள் இந்தியாவிற்கு சுதந்திரம் பெற்றுத் தந்தார், அவர் கோட்சேவால் சுடப்பட்டு இறந்த செய்தியைக் கேட்டு இந்திய மக்கள் அழுகின்றனர் என்கிறார். இருநூறு ஆண்டுகளாய் ஆங்கிலேயரிடம் அடிமைப்பட்டு வந்த இந்திய மக்களை மீட்டு, இந்தியாவிற்கு சுதந்திரம் பெற்றுத் தந்தார். ஆனால் மக்களுக்கு முழுமையான சுதந்திரம் கிடைக்கவில்லை.

**"இருநூறு ஆண்டுகளாய்**

**அவமானத்தில் குனிந்த எங்கள்**

**அகலிகைத் தலைகள்**

**நீ நடந்ததால் நிமிர்ந்தன.**

**பிடித்த கொண்டிருப்பது**

**பிச்சைப் பாத்திரம் என்றாலும்**

**உன்னிடம் நாங்கள்**

**பெற்றுக் கொண்டது**

**அமுத சுரபிதான்!"[11]**

அகலிகைத் தலைகள் மக்களுக்கும், அமுதசுரபி சுதந்திரத்திற்கும், பிச்சைப் பாத்திரம் சுதந்திரமின்மையையும் காட்சிப் படுத்தும் படிமங்களாகும். இதில் அகலிகை இந்திரனால் வஞ்சிக்கப்பட்டு, தன் கணவன் கௌதமன் கொடுத்த சாபத்தினால் இருநூறு ஆண்டுகள் கல்லாக இருந்தாள். இராமன் திருவடிப்பட்டு மீண்டும் உயிர்த் தெழுந்தாள், சாப விமோசனம் பெற்றாள். அகலிகை வறுமை நிலையையும், அமுத சுரபி வளத்தையும், இருநூறு ஆண்டுகள் என்பது இந்தியமக்கள் அடிமைப்பட்டு இருந்ததை நமக்குக் குறியீடாக உணர்த்தும் குறியீட்டுப் படிமமாகும்.

## காதலன் - காதலி

ஆண் – பெண் பால் வேறுபாடு காரணமாக எழுகின்ற ஈர்ப்பும் அதையொட்டி அவர்களிடையே தோன்றும் அன்புணர்வும் காதலாக மாறுகின்றது. ஒருவர் மனதை ஒருவர் ஆட்கொண்ட நிலையில் அவர்களிடையே ஏற்படும் உறவைக் காதலன் – காதலி உறவாகக் கருதலாம்.

**'உனக்கான உதிரிப் பூ'** என்ற கவிதையில் காதலன் காதலி உறவு நிலையை மேத்தா அவர்கள் சூறாவளி, ரோஜா என்ற சொற்களின் மூலம் விளக்குகிறார். காதலன் சூறாவளி காற்றாய் புரப்பட்டு வரும் போது ரோஜாவை போன்ற தன் அழகினால் அவன் மனதைக் கவர்ந்துவிட்டாள். தன்னுடைய காதலை தன் விழிகளால் தெரிவித்தாள். காதலன் அவளிடம் நெருங்கிப் பேச வரும் போது அவனிடம் பேசாமல் உதாசினப் படுத்தினாள். அவனை அழவைத்து மனதைக் காயப்படுத்தினாள் என்கிறார்.

**"நான் சூராவளியாய்ப்**
**புறப்பட்ட போது**
**தனித்து விடப்பட்டதொரு**
**அனாதைச் செடியின்**
**ஒற்றை ரோஜாவாய் நின்று**

என் இரக்கத்தைப்

பெற்றுக் கொண்டாய்.

பார்வைப் பூக்களால் என்

பாதங்களை அர்ச்சித்தாய்!

மெல்லிய பூங்காற்றாய்

உன் மேனியை வருட வந்த போது

ஆயிரத் தலைவாங்கி

அபூர்வ சிந்தாமணியாய் மாறி

அவஸ்த்தைப் படுத்தினாய்

மழை நிரல் பிரதேசமாக

என்னை

மாற்றினாய்!"[12]

சூறாவளி ஆணுக்கும், ரோஜா பெண்ணுக்கும், அபூர்வ சிந்தாமணி பேச மறுப்பதற்கும், அவஸ்தை மனம் வருத்தப் படுவதற்கும், மழை கண்ணீருக்கும் வந்த படிமங்களாகும். இதில் அபூர்வ சிந்தாமணி முடிவென்பதே கிடையாது என்பதையும், விக்கிரமாதித்தியன் கதையை குறியீடாக உணர்த்தும் குறியீட்டு படிமமாகும்.

## மதம்

உலக நாடுகள் எல்லாவற்றிலும் மதம் இருக்கிறது மனித சமுதாயத்தில் நீக்க முடியாத ஒரு களமாக மதம் விளங்குகிறது. மதம் என்னும் சொல்லுக்கு 'நெறி' என்ற பொருள் மாறி இன்று அது வெறியாகிவிட்டது. எனவே தான் மாமேதை **'லெனின்'** கூட மதத்தை **'அபின்'** என்று கூறினார். உலக வரலாற்றில் மதங்கள் ஆற்றிய பங்கை ஆராய்ந்து பார்த்தால் இரத்தவாடையே வீசுகின்றது. மதச் சண்டையால் மண்ணில் உயிர் துறந்தோர் ஏராளம். அத்தகைய மதத்தின் கேடுகள் மற்ற தேசங்களைக் காட்டிலும் இந்திய மண்ணிலே அதிகமாக உள்ளது. சமணம்,

பௌத்தம், ஆசிவகம், கௌமாறம், சைவம், வைணவம் ஆகிய பல்வேறு மதக் கோட்பாடுகள் இந்திய மண்ணில் தோன்றின என்றாலும் இவற்றையெல்லாம் வீழ்த்திவிட்டு ஆரிய வேத வருணாசிரம பார்ப்பனிய இந்து மதமே இந்தியாவில் நிலை பெற்றுவிட்டது. அதன் காரணமாக இந்தியாவில் இந்து மதம் தவிர்த்து பிற மதத்தினர் நசுக்கப்படுவது வாடிக்கையாகிவிட்டது. அதன் தொடர்ச்சியாக இன்றும் இந்தியாவில் இந்து – கிறிஸ்துவர், இந்து – இஸ்லாமியர், இந்து இன்னும் பிற மதத்தவரிடையே மதக் கலவரங்கள் தொடர்ந்து அரங்கேறிக் கொண்டிருக்கின்றன.

**'இந்தியா என் காதலி'** என்ற கவிதையில் மு. மேத்தா அவர்கள் மதங்களினால் ஏற்படும் அவலங்களைச் சுட்டிக்காட்டியுள்ளார். இராமரின் ஓவியம் வண்ணங்களால் வரையப்படவில்லை மனிதர்களின் இரத்தத்தால் வரையப்பட்ட–தாகவும், ஓவியம் வரையும் குச்சியாக இருப்பவர்கள் மத போதகர்கள் என்றும் மதப் போதகர்களை வாழ்க என்று வாழ்த்தும் அவல நிலை தொடர்வதாக கூறுகிறார்.

**"இராம ஓவியம்**
**தீட்டுவதற்கு**
**இரத்தம் போதவில்லை**
**என்று**
**சத்தம் போடுகிகின்றன**
**தூரிகைகள்.**

**நீயோ**

**'தூரிகை வாழ்க' என்று**
**பேரிகை கொட்டகிறாய்!"[13]**

இராம ஓவியம் இராமரின் கோயிலையும், இரத்தம் மக்களையும், சத்தம் கலவரத்தையும், தூரிகை மதப் போதகர்களையும் குறித்து வந்த படிமங்களாகும். இராம ஓவியம் அயோத்தியை நினைவுப்படுத்தும் குறியீடு. பாபரின் மசூதி டிசம்பர் மாதம் 6ஆம் தேதி 1992ஆம் ஆண்டு இடிக்கப்பட்ட போது மக்கள் பலர்

கலவரத்தால் இறந்தனர். பெண்கள் பாலியல் கொடுமைக்கு ஆளாகினர். இதை செய்த மதத் தலைவர்களைத் தொண்டர்கள் போற்றித் திரிகின்றனர் என்று வருத்தத்துடன் மேத்தா கூறுகிறார். இராம ஓவியம் பாபரின் மசூதி இடிக்கப்பட்டதை குறியீடாக உணர்த்தும் குறியீட்டுப் படிமமாகும்.

**'மனமே கோயில் மனிதனே தேவன்'** என்ற கவிதையில் இறைவன் இருப்பது கோயில்களில் அல்ல ஒவ்வொருவரின் மனம் தான் கோயில் மனிதன் செய்யும் நற்செயல்களே இறைவன் என்கிறார். ஒவ்வொரு மதத்தினரின் மதங்களும் மக்களின் துன்பத்தை அகற்றுவதற்காக இருக்க வேண்டுமே தவிர அவர்களின் உயிரை வாங்குவதற்காக இருக்க கூடாது என்கிறார் மு. மேத்தா.

**"அவரவர் மதக்கொடிகள்**
**அசையட்டும் அழகாய்**
**வெறியெனும் நெருப்புக்கு**
**விசிறியாய் அல்ல....**
**களைத்தவர் வாழ்விற்குக்**
**கலங்கரை விளக்கமாய்!"**[14]

கொடிகள் மதங்களையும், களைத்தவர் மக்களையும், கலங்கரை விளக்கம் வழிகாட்டியாய் இருக்க வேண்டும் என்பதையும் குறிக்கும் படிமங்களாகும்.

கலங்கரை விளக்கம் என்பது கடல் வழியாக பயணம் செய்வோர் கரை ஒதுங்குவதற்காக இருக்கின்ற இடம் என்பதையும், ஒரு அடையாள சின்னமாகவும் உள்ள குறியீடு. ஆங்கிலேயரின் கடல் வழி பயணத்தையும் நம் நாட்டை அவர்கள் அடிமைப்படுத்தி ஆண்டதையும் குறிப்பால் உணர்த்தும் குறியீட்டுப் படிமாகும்.

## அரசியல்

பொதுநலன் கருதி உருவாக்கப்பட்ட சட்டத்தின் துணையே மக்களுக்குச் சேவை புரியும் அல்லது தொண்டாற்றும் அல்லது கடமையாற்றும் அமைப்பே

அரசியல். நாடு, குடி, அரசு இந்த மூன்றுக்கும் உள்ள தொடர்பை விளக்கி மூன்றின் உரிமைகளையும் கடமைகளையும் வலியுறுத்துவது அரசியல், மனிதனிடத்து அமைந்துள்ள உயர் பண்புகளை வெளிப்படுத்தி அவனை மேம்படுத்த வழி வகுப்பதும் அதன் கடமையாகும் இவ்வகையில் அரசியல் என்பது சமுதாயத்தின் ஒரு பகுதியே எனலாம். அறிவால் உழைப்பவர்கள் ஆள்பவராகின்றனர். உடலால் உழைப்பவர்கள் ஆளப்படுபவர்களாகி விடுகின்றனர் என்கிறார் ஜேம்ஸ் ஆலன்.

**'இந்தியா என் காதலி'** என்ற கவிதைக்கு மு. மேத்தா அவர்கள் அமைதியான இந்தியா கலவரபூமியாக மாறிக் கொண்டே வருகிறது என்று பின் வரும் கவிதையில் கூறுகிறார்.

**'ராம ராஜ்யக்**
**கனவுகள்**
**மெல்ல மெல்ல**
**ரோம ராஜ்யக்**
**கனவுகளாய்க்**
**மாறிவருகின்றன...'**[15]

இராமனது ஆட்சி அமைதியான ஆட்சியாகும் வன்முறை யில்லாத ஆட்சியாகும். மக்கள் விரும்பும் ஆட்சியாகும்.

**"கூற்றம் இல்லை ஓர் குற்றம் இல்லாமையால்**
**சீற்றம் இல்லைதம் சிந்தையின் செய்கையால்**
**ஆற்றல் நல்லறம் அல்லது இல்லாமையால்**
**ஏற்றம் அல்லது, இழிகதவு இல்லையே !** **(பால. நாட்டு. 39)**

**கோசல நாட்டு மக்களிடத்திலே குற்றங்கள் ஒன்றும் இல்லை, ஆதலால் கூற்றுவன் செய்யும் கொடுமை அந்நாட்டில் இல்லை, அம்மக்களே தூய்மையான**

**உள்ளம் படைத்தவர்கள். ஆதலால், பல குற்றங்களுக்கும் காரணமான சினம் அவர்களிடம் இல்லை."**[16]

ரோமானியர்கள் மூட நம்பிக்கை கொண்டவர்கள் அவர்கள் இரக்கமற்றவர்கள் என்று த. இராமநாதப் பிள்ளை கூறுகிறார். **'குருதி மழை பொழிதல், அரிமா நகர்வீதியில் உலாவுதல், இரட்டைத் தலைப் பிள்ளைகள் பிறத்தல், அரவங்கள் ஒன்றை யொன்று விழுங்குதல், உருமேரு உறுமுதல், வானவர் விசும்பிற் போர்புரிதல், இரையாறு இரத்த வெள்ளமாகப் பாய்தல், உற்பாதங்களுக்குச் சாந்தி செய்தல், பகைவரை உயிரோடு புதைத்தல், மக்கட் பலியிடுதல், கூத்தாடுதல், தெய்வங்களைப் பரவுதல் விழாக் கொண்டாடல் என்னுஞ் சாந்திகள் உரோமராற் செய்யப்பட்டன.'**[17]

இங்கு இராமர் அமைதிக்கும், கனவுகள் ஆட்சிக்கும், ரோம ராஜ்யம் மூடநம்பிக்கை மற்றும் கொடுமையான செயல்களுக்கும் படிமங்களாக வந்துள்ளது. இராம ராஜ்யம் இராமாயணத்தையும், ரோம ராஜ்யம் ரோமர்களின் வாழ்க்கை முறையையும் குறிக்கும் குறியீட்டு படிமங்களாகும்.

**'புதிய சிறைகள்'** என்ற கவிதையில் மு. மேத்தா அவர்கள் வல்லரசு நாடுகள் வளர்ந்து வரும் நாடுகளை முன்னேற விடாமல் தடுக்கிறது என்றும், அந்த நாடுகளின் செல்வங்களை கொள்ளையடிப்பதுடன் இல்லாமல், வளர்ந்து வரும் நாடுகளை தனது கட்டுப்பாட்டிற்குள் வைத்துக் கொள்கிறது என்று கூறுகிறார்.

**"சீதைகளை மட்டுமல்ல**
**அயோத்தியையே**
**கடத்திச் செல்ல**
**ஆசைப்படும்**
**இராவண வல்லரசுகளால்'**[18]

இங்கே சீதை வளர்ந்து வரும் நாட்டையும், இராவணன் வல்லரசு நாடுகளையும், சிறைவாசம் வளரவிடாமல் தடுப்பதையும் குறிக்கும் படிமங்களாகும்.

**'சீதாப்பிராட்டி, தனித் திருக்கும் போது அவளைக் கவர்ந்து செல்ல இராவணன் முனிவர் வேடத்தில் வந்தான். அவனைச் சீதை உபசரித்து, நீர் யார் ? என்று கேட்டாள் அவன் நான் அரக்கர் வாழும் ஊரில் இருக்கின்றேன் என்றான்'**[19] மேலும் இராவணனின் புகழையும் அவன் பலத்தையும் முனிவனாக வந்திருந்த இராவணன் கூறினான். அதைக் கேட்டு சீதை என் கணவர் அரக்க சாம்ராச்சியத்தையே கூண்டோடு அழிப்பதாகச் சூளுரைத்துள்ளார் என்றாள். இதைக் கேட்ட இராவணனுக்குக் கோவம் வந்தது தன் சுயரூபத்தைக் காட்டினான். **'பத்து தலைகளும் இருபது தோள்களும் உடைய அசுர வடிவுடன் நின்றான். சீதாதேவி அவ்வடிவைக் கண்டு அஞ்சி நடுங்கினாள். இராவணன் அவளைத் தீண்ட அஞ்சி, ஆழமாக அகழ்ந்து பூமியுடன் பர்ணசாலையை எடுத்து தேரின் மீது வைத்து விண்வழியே புறப்பட்டான்.'**[20]

இக்கவிதையில் சீதையை மட்டும் தான் இராவணன் கடத்திச் சென்றான், வளர்ந்து விட்ட வல்லரசுகளோ சீதை வாழ்கின்ற நாட்டுடன் சேர்த்து சீதையை கடத்திச் செல்வதாக மேத்தா கூறுகிறார். சீதை கற்பின் குறியீடிற்கும்! இராவணன் பெண் ஆசையால் அனைத்தையும் இழந்தவன் என்பதை உணர்த்தும் குறியீடிற்கும்! பெண்ணாசையால் இராவணன் அழிந்தான், மண்ணாசையால் வளர்ந்த நாடுகள் அழியும் என்பதைக் குறிக்கும் குறியீட்டுப் படிமங்களாகும்.

## தொன்மம்

தொன்மம் என்பது புராணம் அல்லது புராணிகம் என்று பொருள். தொன்மம் என்பது பழமையான, பழமை சார்ந்த என்று பொது நிலையில் பொருள் கொள்ளப்படும் புது கவிதையில் கவிஞர்கள் அழகும் அர்த்தமும் வெளிப்பட கவிதைகள் இயற்றியுள்ளனர் இன்றைய நாட்டு நடப்புகள் சமூக சீர்கேடுகள், தனி மனிதரின் செயற்பாடுகள் தொன்ம உத்திகளாக புதுக் கவிதைகளில் உள்ளன.

**'தொன்மம்'** ஆங்கிலத்தில் **'மித்'** என்று வழங்கப்படுகிறது. **'மித்'** என்பதற்குத் தமிழ்ப் பொருள், கற்பனையாய்ப் படைக்கப்பட்டவர், வெற்றுப் புனைந்துரை, புராணக் கதைகளின் தொகுப்பு, புராண ஆய்வுத்துறை நூல், புராண கதைகளை அறிந்தவன், புராணக் கதைகள் எழுதுபவர், புராணப் படைப்புக் கவிஞர், கட்டுக் கதை என்ற பொருளைத் தருகிறது.

**தொன்மங்களுக்கும் கவிதைகளுக்கும் இடையே நெருங்கிய தொடர்பு காணப்படுகின்றது. உலகில் பெரும்பாலான தொன்மங்கள் கவிதை மூலமே வெளிப்படுத்தப்பட்டுள்ளன. "புராணக்கதை மூலமாகக் கிடைக்கப் பெற்ற மூலகதை கவிஞன் தன் பேராற்றலால் மாற்றி அமைத்து, தனக்கேயான கவிதையைப் படைக்கின்றான். கவிஞன் தன் கவிதையில் புராணத்தை ஒரு உயிர்ப் பொருட்கூறாக இணைத்து, கவிதையும், புராணத்தையும் ஓரிணைக் கூறாக அமைக்கிறான். எனவே, கவிதையில் புராணம் என்பது பின் ஏட்டாகவோ, இணைப்பாகவோ இல்லாமல், கவிதையின் உயிர் மூலக் குருதியாக இருக்கிறது." என்று கவிதையில் தொன்மங்கள் இடம் பெறும் விதம் குறித்து யுனிவெர்சல் ஆங்கில அகராதி கூறுகின்றது.**[21]

மு. மேத்தா அவர்களின் கவிதைகளில் தொன்ம கவிதைகள் மிகுந்து காணப்படுகின்றன. **'செருப்புடன் ஒரு பேட்டி'** என்ற கவிதையில் செருப்பு சொல்கிறது சில தேசங்களை பார்க்கின்ற போது மீண்டும் நாங்கள் ஆட்சி பீடத்தில் அமர்ந்து ஆட்சி செய்தால் என்ன என்று யோசிக்கிறோம் ?

**'தீவிரமாக எதைப்பற்றியாவது நீங்கள்**
**சிந்திப்பதுண்டா ?**
**உண்டு !**
**சில தேசங்களையும்**
**சில ஆட்சிகளையும்பார்க்கும் போது**
**மீண்டும் நாங்களே**
**சிம்மாசனம்**

**ஏறிவிடாலாமா**

**யோசிப்பதுண்டு !**[22]

பரதன் இராமனின் பாதணியை வைத்து பதினான்கு ஆண்டுகள் ஆட்சி புரிந்தான். அப்போது சிம்மாசனத்தில் அரசன் இல்லை. செருப்பு தான் ஆட்சிப் புரிந்தது, அதைத் தான் செருப்பு கூறுகிறது. இராமாயணம் இங்கு தொன்மமாக காட்டப்படுகிறது.

**'குற்றப் பத்திரிகை'** என்ற கவிதையில் வாலியைக் கொன்றது இராமன், பெண்ணே நீ வாலிப வதை செய்கிறாய், என் காதலையும் என் அன்பையும் ஏற்க மறுக்கிறாய்.

**'கம்பன் காவியத்தில்**

**வாலி வதை**

**கண்ணே நீ செய்வது**

**வாலிப வதை !'**[23]

இங்கே வாயு புத்திரன் வாலி தொன்மமாக வருகிறான். கிட்கிந்தையின் அரசன் வாலி இராவணனுடன் போரிட்டு, இராவணனை வென்று தன் வாலால் கட்டி சிறை வைத்தவன். வாலியின் முன்பு நின்று போர் புரியும் வீரனின் பாதி பலம் வாலியை வந்து சேர்ந்துவிடும், அப்படி ஒரு வரத்தைப் பெற்றவன். பெண்ணே நீயும் உன் பார்வையால் என்னை மறைமுகமாக காதல்வதைச் செய்கிறாய், என் அன்பையும் ஏற்க மறுக்கிறாய். இங்கே வாலி இராமாயணத்தில் வரும் கிட்கிந்தை படலத்தை நினைவுக் கூறும் தொன்மங்களாகும்.

**'அன்பழைப்பு'** என்னும் கவிதையில் மு. மேத்தா அவர்கள் மனிதர்கள் தனக்கு தானே வளையம் அமைத்து கட்டுண்டு கூண்டில் அடைப்பட்டு கிடப்பதாக கூறுகிறார். அந்த கூண்டுகளை உடைத்து மக்களே வெளியே வாருங்கள் என்று அழைப்பு கொடுக்கிறார்.

'நாம்

மதுரையை எரித்த

நெருப்பின் மிச்சம்

இலங்கையைச் சுட்ட

தீயின் சொச்சம்

கூண்டுகளை உடைப்போம் !

நமக்கான

கூடுகளைப் படைப்போம் !'[24]

மதுரையையும், இலங்கையையும் எரித்த நெருப்பு மீதம் இருக்கிறது, அதை வைத்து நாம் அகப்பட்டு கொண்டிருக்கும் கூண்டை உடைத்து வெளியே வருவோம். அடிமை என்னும் கூண்டை உடைத்து சுதந்திரம் என்னும் கூட்டை உருவாக்குவோம் என்று மேத்தா கூறுகிறார். கண்ணகி மதுரையை எரித்ததையும், அனுமன் இலங்கையை எரித்ததையும் கூறும் தொன்மங்களாகும்.

**'தலைகள்'** என்ற கவிதையில் இளைஞன் ஒருவன் பிறர் மனைவியை நோக்காதிருந்த இராமனைப் போல் இருந்தான், வீதியில் அவன் நடந்து செல்லும் போது அழகிய பெண்களின் அழகு அவனைக் கவர்ந்து இராவணனாக மாறிப் போனான். இராவணனைப் போல் பிறர் மனைவியை அபகரிக்க நினைக்கிறான் என்று மேத்தா கூறுகிறார்.

'இராமனாகத்தான்

வீட்டிலிருந்து

வெளியே வந்தான் !

வீதியில்

அடுத்தவீட்டு சீதைகள்

அசைத்து நடந்த

அழகைப் பார்த்ததும்

**தயங்கித் தயங்கித்**

**தலைகள் முளைக்கவே**

**இராவணன் ஆனான் !'**[25]

இங்கே இராமன், சீதை மற்றும் இராவணன், இராவண காவியத்தை நமக்கு உரைக்கும் தொன்மங்களாகும்.

**'கடந்தவர்கள்'** என்னும் கவிதையில் மு. மேத்தா அவர்கள் பெண்களுக்கு நடக்கும் வரதட்சிணை கொடுமையைச் சித்தரிக்கிறார், இராவணன் சீதையை கடத்திச் சென்று இலங்கையில் சிறை வைத்திருந்தான். இன்றைய ஆண்கள் திருமணம் என்ற பெயரில் பெண்ணை அவள் விருப்பத்துடன் அழைத்துச் செல்கிறார்கள் அவளை சிறை வைப்பதற்கு என்று கூறுகிறார்.

சீதையை இராவணன் அவள் விருப்பமின்றி கடத்திச் சென்றான் என்பதைக் கூறும் **'புறநானூறு'** பாடல் வரிகள்,

**"கருந்தேர் இராமன் உடன்புணர் சீதையை**

**உயித்த கை அரக்கன் வவ்விய ஞான்றை"** **(புறநானூறு.378)**

மு. மேத்தாவின் **'கடந்தவர்கள்'** என்ற கவிதையில்,

**'இன்னலிலிருந்து**

**இன்றைய சீதைகளை**

**இராமர்களின்**

**வில்லாற்றல் எதுவும்**

**விடுவிக்க முடியாது**

**காரணம் –**

**அன்றைய இராவணன்**

**சீதையை**

பலாத்காரமாக

கடத்திச் சென்றான்.

நவீன

இராவணன்மார்களோ

பக்குவமாகக்

கடத்திச் செல்லுகிறார்கள் –

திருமணம் செய்து கொண்டு.'[26]

இராவணன் ஆணிற்கும், சீதை பெண்ணிற்கும், கடத்தல் என்றதை வரதட்சிணைக் கொடுமைக்கும், இராமனின் வில்லாற்றலைக் கொண்டு பெண்களைக் இறைவனாலும் காக்க முடியாது என்பதை உணர்த்தும் குறியீட்டுப் படிமங்களாகும். இராமன், சீதை, இராவணன் இராமவதாரத்தை நினைவு கூறும் குறியீடு.

1. இராமன் கோசலை மைந்தன், திருமாலின் அவதாரம், சீதையின் கணவன், மனைவியை சந்தேகித்து தீக்குள் இறங்க வைத்து சோதனைச் செய்தவன்.

2. சீதை ஜனகனின் மகள், இலட்சுமியின் அவதாரம், இராமனின் மனைவி, இராவணனால் கடத்தப் பட்டு இராமனால் மீட்கப் பட்டவள், எட்டு மாத கர்ப்பிணியாக இருந்த போது இராமனின் கட்டளையின் படி இலக்குவனால் நடு காட்டில் விடப்பட்டவள், லவ குசா ஆகிய இரு குழந்தைகளின் தாய்.

3. இராவணன் பத்து தலைகளையும் இருபது தோள்களையும் உடையவன், மனைவி மக்களோடு வாழ்ந்தவன், ஒரு இலட்சம் பெண்களின் கணவன், மனைவிகளைச் சந்தேகம் கொள்ளாதவன், வீணை மீட்டுவதில் வல்லவன், வீணையை மீட்டி பரமேசுவரனிடம் ஈஸ்வரப் பட்டம் பெற்றவன்.

**'கடந்தவர்கள்'** என்னும் கவிதை இதிகாசத் தொன்மத்தை விளக்க வந்தக் குறியீட்டு படிமங்களாகும்.

**'கி.பி. 2000'** என்ற கவிதையில் மு. மேத்தா அவர்கள் 1999 ஆம் ஆண்டானது சவப்பெட்டிக்குள் சென்று விட்டதாகவும், மக்கள் 2000 ஆம் ஆண்டை வரவேற்று மகிழ்ச்சியுடன் கொண்டாடுவதாகவும், பழைய நாட்காட்டியை கழற்றி விட்டு புதிய நாட்காட்டியை மாட்டும் போது சில நம்பிக்கைகளையும் சேர்த்து ஆணி அடித்து மாட்டுவதாகவும் கூறுகிறார். சிலுவையில் இயேசு பிரான் இருப்பதைப் போன்று அவரும் நாட்காட்டியுடன் இணைந்து விட்டதாகக் கூறுகிறார்.

**'ஆணியடித்து மாட்டினேன்**
**சில நம்பிக்கைகளையும்**
**ஒரு நாட்காட்டியையும்**
**சிலுவையில் நான்!'**[27]

இங்கே சிலுவை இயேசுநாதரையும், நான் என்ற சொல் மேத்தாவையும் குறிக்கும் குறியீட்டு படிமங்களாகும். சிலுவை இயேசு பிரானைக் குறிக்கின்ற குறியீடு. இயேசு பிரான் வாழ்ந்த காலத்தில் தவறுகள் செய்பவர்களை சிலுவையில் ஆணியடித்து மாட்டும் பழக்கம் இருந்தது. தண்டனைக்கு மட்டுமே பயன்படுத்திய சிலுவை, இயேசு பிரான் சிலுவையில் அறைந்த பின்னர், பாவத்தின் சின்னமாக இருந்த சிலுவை இறைவனின் சின்னமாக மாறியது. இயேசு நாதரின் இறைத்தன்மையையும் போதனையும் ஏற்றுக் கொள்ளாத யூதர்கள் அவரை சிலுவையில் அறைந்தார்கள்.

**'இயேசு பிரான் தமது இறைச் செய்தியை வழங்க நினைத்த போது அது எளிமையாக முடிந்ததா? தடங்கல் வரவில்லையா? தச்சன் ஜோசப்பின் அதிகப்பிரசங்கி மகனாக அல்லவா உலகம் அவரை அடையாளம் கண்டது! முன்னேற்றத்திற்கு முட்டுக்கட்டை போட்டு முள்மகுடம் அல்லவா வைத்தது! மறந்து விடாதீர்கள்... சிலுவையில் அறைந்ததால் தான் இயேசு இன்னமும் ஜீவிக்கிறார்'**[28] என்று சுகிசிவம் கூறுகிறார்.

## வருத்தம்

துன்பம், ஒருவரின் இழப்பு, நோயாளியின் அபாய நிலை, அரிதல் நிகழ்வது, காதலில் தோல்வி, தொழிலில் நட்டம், கல்வியில் மந்தநிலை, புரிந்து கொள்ளாத உறவினர் மற்றும் சுற்றத்தார், ஒருவரின் தகாத வார்த்தைகள் போன்றவைகளால் ஒருவருக்கு ஏற்படும் மன உலைச்சலே வருத்தமாகும்.

**'கும்பகோணத்தில் மகாவதம்'** என்ற கவிதையில் மு. மேத்தா அவர்கள் பள்ளியில் குழந்தைகளை படிப்பதற்குத் தான் தாய்மார்கள் அனுப்பி வைத்தார்கள். அவர்களை தீக்கு இரையாக அல்ல என்று வருத்தம் கொள்கிறார். மேலும், கண்ணகி திருகி எரிந்த மார்பு தான் மதுரையை அழித்தது ஆனால் கும்பகோனத்தில் (ஜூலை 16ஆம் தேதி 2004ஆம் ஆண்டு) கிருஷ்ணா ஆரம்ப பள்ளியில் ஏற்பட்ட தீ விபத்தில் 94 குழந்தைகள் உடல் கருகி இறந்து போனார்கள் என்ற செய்தியைக் கேட்டதும், குழந்தைகளுக்கு பாலூட்டிய தாய்மார்களின் மார்புகள் எரிகிறது என்று கூறுகிறார்.

**'மதுரையை எரித்த**
**கனல்**
**கண்ணகியின் மார்பு!**
**கும்பகோணத்தில்**
**கொளுந்து விட்டநெருப்பில்**
**பற்றி எரிகின்றன**
**பாலூட்டிய மார்புகள்.'**[29]

இங்கே கண்ணகி தாய் மார்களுக்கும், மார்புகள் துயரத்திற்கும், மதுரை சிலப்பதிகாரத்தையும், தீ நீதியையும் கும்பகோணம் பள்ளி எரிந்ததையும் குறிக்கின்ற படிமங்களாகும்.

**"சிலப்பதிகாரக் கண்ணகி பாண்டியன் நெடுஞ்செழியனை வாதில் வெல்கின்றாள். கோவலனைக் கொன்றது குற்றமென்று உணர்ந்த பாண்டியன் உயிர்**

விடுகிறான். இந்த நிகழ்ச்சிக்குப் பிறகும் சீற்றந் தனியாத கண்ணகி தேவி மதுரை மாநகரைத் தீக்கிரையாக்குகிறாள். அப்படிக் கொளுத்தியது குற்றமன்று என்று கண்ணகியே கூறுகின்றாள்.

நான் மாடக் கூடல் மகளிரு மைந்தரும்
வானக் கடவுளரும் மாதவருள் கேட்டீமின்
யானமர் காதலன் தன்னைத் தவறிழைத்த
கோநகர் சீறினேன் குற்றிமிலேன் யான் "[30]

(சிலப்பதிகாரம். வஞ்சின மாலை.39 – 42)

கண்ணகி கற்புக்கும், கணவனோடு குறைந்த நாட்களே வாழ்ந்தாள் என்பதையும், கணவனையே தெய்வமாக வணங்கியவள் என்பதையும் உணர்த்தும் குறியீட்டுப் படிமங்களாகும்.

**'வால்காவும் காவிரியும்'** என்கிற கவிதையில் இன்று வரை தீர்க்கப்படாத காவிரி நதிநீர் பிரச்சனைப் பேசப்படுகிறது. தஞ்சை மக்களின் விவசாயத்திற்காகவும் குடிநீருக்காகவும் தமிழகம் ஒரு போராட்டம் நடத்தியது இதில் தமிழக மக்கள் அமைதியான முறையில் போராட்டம் நடத்தினார்கள். காவிரி நதிநீரைத் தர மறுத்த கர்நாடகமும் போராட்டம் நடத்தியது அப்போராட்டத்தின் போது தமிழர்கள் தாக்கப்பட்டனர் பல இன்னல்களுக்கு ஆளாயினர் என்கிறார் மேத்தா.

'கர்நாடகம்
ஒரு பந்த் நடத்தியது
கன்னட வெறியர்கள்
இட்லர் அவதாரம்
எடுத்து மகிழ்ந்தார்கள்
தமிழகம் ஒரு
பந்த் நடத்தியது

**கைகளைக் கட்டிக்கொண்டு**

**நாங்கள்**

**காந்திகளாய் இருந்தோம்!**[31]

ஜெர்மனியின் சர்வாதிகாரியாக திகழ்ந்த இட்லர் இரக்க மற்றவன் மக்களைக் கொன்றுக் குவித்தவன்ஆவான், அது போல் கன்னட வெறியர்களும் இரக்கமற்று தமிழர்களைக் துன்புறுத்துகிறார்கள். ஆனால் தமிழக மக்களோ காந்தியடிகளின் அகிம்சை என்னும் தத்துவத்தின் அடிப்படையில் அமைதியான முறையில் போராட்டம் நடத்தினார்கள்.

இங்கு இட்லர் சர்வாதிகாரத்திற்கும், காந்தியடிகள் அமைதிக்கும் வந்த படிமங்களாகும். இட்லர் முதல் உலகப் போரையும், காந்தியடிகள் இந்தியாவின் விடுதலையையும் குறிக்கின்ற குறியீட்டு படிமங்களாகும். இட்லர் மண்ணாசைக்கும், காந்தியடிகள் ஆசைகளை துறந்தவர் என்பதைக் குறிக்கும் குறியீடு.

**'சோகச் சுற்றுலா'** என்ற கவிதையில் மு. மேத்தா அவர்கள் இந்திராகாந்தி அம்மையார் (அக்டோபர் 31ஆம் நாள் 1984ஆம் ஆண்டு) சத்வந்சிங் மற்றும் பீண்ட் சிங் ஆகிய இரு பாதுகாவலர்களால் துப்பாக்கியால் சுடப்பட்டு இறந்தார், என்பதை வெள்ளைப்புறா ஒன்றை வீழ்த்தியது கள்ளப்புறாவின் துப்பாக்கிகள் என்று பின் வரும் கவிதையில் கூறுகிறார்.

**'சமாதானத் தூது செல்லும்**

**வெள்ளைப் புறா ஒன்றை**

**வீழ்த்தியது......**

**கள்ளப் புறாக்களின்**

**கைத் துப்பாக்கிகள்.'**[32]

இங்கு வெள்ளைப்புறா இந்திராகாந்திக்கும், கள்ளப் புறாக்கள் சத்வந்சிங் மற்றும் பீண்ட் சிங் ஆகிய இருவரையும் குறிக்கும் குறியீட்டு படிமங்களாகும். **'1984ஆம்**

**ஆண்டு'** மே மாதம் அமிர்தாசரஸ் பொற்கோயிலைத் தீவிரவாதிகள் ஆக்கிரமித்துக் கொண்டனர். அன்னை இந்திரா காந்தியின் தலைமையில் **'ஆபரேஷன் புளூ ஸ்டார்'** என்ற பெயர் கொண்ட இராணுவக் குழு பொற்கோயிலுக்குள் நுழைந்து அனைத்து தீவிரவாதிகளையும் கொன்று பொற்கோயிலை மீட்டது. இந்தச் சண்டை **'1984 ஆம் ஆண்டு ஜூன் 1ஆம் தேதி தொடங்கி ஜூன் 10ஆம் தேதி'** வரைப் நடைப் பெற்றது. இதில் 800 இராணுவத்தினரும் 200 பொது மக்களும் உயிரிழந்தனர் இச்சம்பவம் சீக்கியர்களிடையே பெரும் மனஉளச்சலை ஏற்படுத்தியது. இதன் விளைவாக **'அக்டோபர் 31ஆம் தேதி 1984ஆம் ஆண்டு'** இந்திராகாந்தி அவர்களை இரு சீக்கிய பாதுகாவளர்கள் சுட்டுக் கொன்றனர். வெள்ளைப் புறா என்பது சமாதானத்திற்கும், கள்ளப் புறா என்பது வன்முறைக்கும் குறியீடாக வந்துள்ளது.

**'பாவேந்தர் ஒரு நிலா'** என்ற கவிதையில் மு. மேத்தா அவர்கள் பாரதிதாசன் அவர்களை உழைப்பாளியின் போராளி என்று கூறுகிறார். பாரதிதாசனை உன்னிடத்தில் என்ன கறுப்பு நிறம் ? என்றும், நீ தமிழர்களின் நிறத்தை காட்டுகிறாயா ? என்று கேள்விகளைக் கேட்கிறார்.

**'ஆம் நிலவே**
**உன்னிடத்தில் கொஞ்சம்**
**அது என்ன**
**கறுப்பு நிறம் ?**

**ஓ!**
**நீ**
**கறுப்புச் சட்டைக்காரன்**

**என்பதைக்**
**காட்டவா ?'**[33]

இங்கு கறுப்பு நிறம் போராட்டத்தையும், கறுப்புச் சட்டை தமிழர்களையும் குறிக்கும் படிமங்களாகும். கறுப்புத் திராவிடர்களின் நிறமாகவும், தமிழரின் நிறமாகவும்,

திராவிட இயக்கத்தின் நிறமாகவும், புரட்சியின் நிறமாகவும் காட்சிப்படுத்தும் குறியீட்டு படிமமாகும். கறுப்பு என்பது புரட்சியின் குறியீடு.

**'அரளிப் பூ அழுகிறது'** என்ற கவிதையில் ஓர் முதிர் கன்னியின் ஏக்கம் வெளிப்படுகிறது. அவள் நினைக்கிறாள் மற்ற பெண்களை போலவே நானும் ஓர் பெண்ணாகத்தான் பிறந்தேன், மற்ற பெண்களுக்கு இருப்பது போன்றே என்னுள்ளும் ஆசாபாசங்கள் உள்ளன, இருந்தும் என்னை யாரும் மணக்க முன்வரவில்லை. என்னை யாரும் மணக்காததால் நான் குடும்பத்தைக் கட்டிக்காக்கும் குடும்பத் தலைவியாகவில்லை என்று வருத்தத்துடன் கூறுகிறாள். சமூகத்தில் அவள் ஒதுக்கப்பட்டுவிட்டாள் என்ற சோகத்தை உணர்த்துகின்றது பின் வரும் கவிதை,

**'பூக்களிலே நானுமொரு**
**பூவாய்த்தான் பிறப்பெடுத்தேன்**
**பூவாகப் பிறந்தாலும்**
**பொன் விரல்கள் தீண்டலையே!**
**பொன் விரல்கள் தீண்டலையே – நான்**
**பூமாலை யாகலையே!'**[34]

இங்கே அரளிப்பூ முதிர்கன்னிக்கு படிமமாக வந்துள்ளது. அரளிப்பூவை இறைவனுக்கு வைத்து பூஜை செய்வார்கள். பெண்கள் கூந்தலில் சூட மாட்டார்கள். அரளிப்பூ பெண்ணிற்கு குறியீடாக வந்துள்ள குறியீட்டு படிமமாகும்.

## முடிவுகள்

மனதில் தோன்றும் காட்சிகளையும் கருத்துகளையும் மரபுக் கட்டுபாடின்றி கூறுவதே புதுக் கவிதை. புதுக் கவிதையில் பல உத்திகள் உண்டு அதில் சிறந்த உத்தியாக படிமம் திகழ்கிறது. மு. மேத்தா அவர்கள் தன்னுடைய கவிதையில் படிம உத்திகளைக் கையாண்டுள்ளார்.

சமூகத்தில் நிலவும் அவலங்கள், சமயம், தொன்மம், அரசியல், சுதந்திரம் பற்றிய பல கருத்துக்களை குறியீட்டுப் படிமங்களின் வாயிலாக கூறுகிறார். படிமத்தின் வகையான குறியீட்டு படிமத்தைக் குறியீடுகளின் மூலம் தெரிவிக்கிறார். விக்கிரமாதித்தன் என்பது புராணக் குறியீடாகவும், இராமன் சீதை இராவணன் இதிகாச குறியீடுகளாகவும், இட்லர் காந்தியடிகள் வரலாற்றுக் குறியீடுகளாகவும், மற்றும் கண்ணகி போன்ற பெயர்கள் தொன்மக் குறியீடுகளாக கூறப்படுகிறது. சிலப்பதிகாரம், சிலுவை, தூரிகை, அமுதசுரபி போன்றவை குறியீடுகளுக்கு வந்த பொருட்களாகும். இலங்கை, மதுரை, அயோத்தி மற்றும் ரோம் போன்ற இடங்களைக் கொண்டுக் குறியீட்டுப் படிமங்களைக் கூறுகிறார்.

கவிதையில் மட்டுமே குறியீட்டுப் படிமம் வருவதில்லை சிற்பக் கலை, ஓவியக் கலை, கட்டிடக் கலை போன்றவைகளிலும் குறியீட்டு படிமங்கள் காணப்படுகின்றன. சிற்பக் கலைக்கு எடுத்துக்காட்டாக **'முதலாம் இராசேந்திர சோழனால் அமைக்கப் பெற்ற கங்கை கொண்ட சோழ ஈஸ்வரதிற்கு சோழர் காலச் சிற்பக் கலையின் சோழ நிலையினைக் காண முடிகிறது. பிரம்மனுடைய உருவத்திலே நீண்டதாடி அமைந்திருப்பது குறிப்பிடத்தக்கது. இந்தச் சிற்பம் இராஜேந்திர சோழனுடைய கங்கைப் படையெடுப்பினை நினைவு படுத்துகிறது. பொதுவாக வட இந்தியச் சிற்பங்களில் மட்டுமே பிரமனுடைய உருவம் தாடியுடன் காணப்படும்.'**[35] இங்கு வட இந்தியச் சிற்பக்கலையை காட்சிப்படுத்தும் பிரம்மனின் சிலை இராசேந்திரன் நெடுநாட்களாகக் கங்கை படையெடுப்பில் ஈடுபட்டான் என்பதைக் குறிப்பால் உணர்த்தும் குறியீடாகத் திகழ்கிறது. பிரம்மனின் சிலை வட இந்தியச் சிற்பகலையையும், பிரம்மனின் தாடி இராசேந்திரனின் கங்கை படையெடுப்பையும் காட்சிப்படுத்தி உணர்த்தும் குறியீட்டுப் படிமமாகும்.

உவமைப் படிமங்களும் மு. மேத்தா அவர்களின் கவிதையில் இடம் பெறுகின்றன. **'உவமையில் படிமம் அமைய உவமேயம் காட்சிப் பொருளாகவோ,**

**கருத்துப் பொருளாகவோ இருக்கலாம், ஆனால் உவமானம் காட்சிப் பொருளாக மட்டுமே இருக்க வேண்டும்.'**[36] என்று மு. சுதந்திரமுத்து அவர்கள் உவமைப் படிமத்திற்கு விளக்கம் தருகிறார். உவமைப் படிமங்களையும் அவை கவிதையில் இடம் பெறும் முறைகளையும் பின் வரும் இயலில் அறியப்படும்.

# அடிக்குறிப்புகள்

1. அ. ஜெயம், சந்திரலேகா வைத்தியநாதன், தமிழ் இலக்கண வரலாறு, ப.397
2. பாரதியார், பாரதியார் கவிதைகள், ப.490
3. அப்துல் ரகுமான், புதுக்கவிதைகளில் குறியீடு, ப.58
4. மேலது, ப.40
5. வெல்லக்கும் வாரனும், தியரி ஆப் லிட்ரேட்சர், ப.194
6. அப்துல் ரகுமான், மேற்படி நூல், ப.59,60
7. சுதந்திர முத்து, படிமம், ப.57
8. ஜோசப் வாரன் பீச், ஓபேசிவ் இமேஜ், ப.இ
9. சுதந்திர முத்து, முன்னூல், ப.57
10. மு. மேத்தா, கண்ணீர் பூக்கள், பக்.28,29
11. மேலது, ப.83
12. மேலது, ப.78
13. மு. மேத்தா, ஆகாயத்திற்கு அடுத்த வீடு, ப.4
14. மு. மேத்தா, கனவுக் குதிரைகள், ப.19
15. மு. மேத்தா, ஆ.அ., ப.5
16. ஸ்ரீ. பிரசாந்தன், கம்பனைப் போல், ப.8
17. த. இராமநாத பிள்ளை, உலக வரலாறு, ப.319
18. மு. மேத்தா, காத்திருந்த காற்று, ப.52
19. ஸ்ரீ. பிரசாந்தன், முன்னூல், ப.16
20. கிருபானந்த வாரியார், இராம காவியம், ப.95
21. மு. அருணாச்சலம், தமிழ்ப் புதுக்கவிதைகளில் தொன்மங்கள், ப.9
22. மு. மேத்தா, க.பூ., ப.74
23. மு. மேத்தா, ஆ.அ., ப.8
24. மேலது, ப.46
25. மு. மேத்தா, அவர்கள் வருகிறார்கள், ப.85

26. மு. மேத்தா, ஒரு வானம் இரு சிறகு, ப.41

27. மு. மேத்தா, ஆ.அ., ப.75

28. சுகிசிவம், வெற்றி நிச்சயம். ப.61

29. மு. மேத்தா, ஆ.அ., ப.75

30. ஸ்ரீ. பிரசாந்தன், முன்னூல், ப.29

31. மு. மேத்தா, கனவுக் குதிரைகள், ப.25

32. மு. மேத்தா, இதயத்தில் நாற்காலி', ப.71

33. மு. மேத்தா, முகத்துக்கு முகம், ப.26

34. மு. மேத்தா, க.பூ., ப.41

35. சி. பத்மநாதன், இந்து கலாசாரம் – கோயில்களும் சிற்பங்களும், ப.196

36. மு. மேத்தா, படிமம், ப.112

# இயல் - 4

## மு. மேத்தாவின் கவிதைகளில் உவமைப் படிமங்கள்

கவிதை என்பது ஒரு கருத்தை அல்லது சிந்தனையை உணர்வுகளின் மூலம் மொழியில் முதிர்ந்த சொற்களால் பதிவு செய்வதே கவிதை. சொற்கள் பதிவான பிறகே வடிவம் உண்டாகிறது, ஓசை பிறக்கிறது, உத்தி புலப்படுகிறது. உணர்வுகளின் மூலம் மொழியை ஆட்சி செய்யும் கருத்தே கவிதை என்று பொன்மணிவைரமுத்து கூறுகிறார்.

**'சொற்களின் பொருள்களைக் காட்டிலும், அவை குறியீடு செய்கின்ற புறவயக் காட்சியைக் காட்டிலும் சொற்கள் சுட்டும் எதார்த்த அம்சங்களின் அடியிலுள்ள உணர்வாம்சமே கவிதையில் முக்கியம்'**[1] என்று அ. மார்க்ஸ் கூறுகிறார். கற்பனையில் மிகுந்து செஞ்சொற் கவிதை படைத்தல் வேண்டும் அது உண்மையை நோக்கமாக கொள்ளாது இன்பம் தருவதையே நோக்கமாக கொண்டிருக்க வேண்டும் என்பார் கோல்ரிட்ஜ். தொல்காப்பிய இலக்கணத்துக்குள் எந்த இலக்கிய வகையையும் அடக்கி விடலாம்.

**"விருந்தே தானும்**

**புதுவது கிளந்த யாப்பின் மேற்றே"**

என்று தொடர் நிலைச் செய்யுட்கு உரியனவாகக் கூறிய நூற்பாவின்படி, **'விருந்து'** என்னும் இலக்கிய வகைக்குள் இன்றைய புதுக் கவிதைகள் அடங்குகின்றன.

**"இலக்கணச் செங்கோல்**

**யாப்புச் சிம்மாசனம்**

**எதுகைப் பல்லக்கு**

**மோனைத் தேர்கள்**

**தனி மொழிச் சேனை**

**பண்டித பவனி**

இவை எதுவும் இல்லாத

கருத்துக்கள் தம்மைத்

தாமே ஆளக்

கற்றுக் கொண்ட

புதிய மக்களாட்சி

முறையே

புதுக்கவிதை ”[2]

என்று புதுக்கவிதைக்கான இலக்கணத்தைத் தெளிவாக கூறுகிறார் மு. மேத்தா.

எதுகை, மோனை, சீர், தளை அடிவரையறை இவற்றிற்குள்ளாகக் கருத்துகளை அடக்கத் தெரியாதவர்களும் அடக்க முடியாதவர்களும் கருத்திற்கு அவை தடையாக இருப்பதாகக் கருதினவர்களும் உத்திகளில் அடைக்கலம் தேடினார்கள். புதுக்கவிதையில் உருவாகி வரும் உத்திகள் பல. அவை, விடுகதத்தன்மை, உரையாடல், நாட்டுப் பாடல் உத்தி, கேள்வி பதில், ஏளனக்கவி, சொல்லுடைப்பு, மறிதருதல், அங்கதம், கட்புல வடிவம், முரண், படிமம், குறியீடு, பொருள் அடக்கு, சொல் அடுக்கி வரல் போன்ற உத்திகளில் தலைச் சிறந்த உத்தியாக படிமம் திகழ்கிறது. உவமை, உருவகம் என்பன மேன் மேலும் இறுகிய நிலையில் தான் படிமம் தோன்றுகிறது. முற்றுருவகப்பாங்கில் அமைந்து தெளிவான தோர் அகக் காட்சியை வழங்கும் ஆற்றலுடையதே படிமம் ஆகும்.

‘இரவும் பகலும்

எதிரெதிர் மோதிட

உடைந்த பகலின்

துண்டுகள் ’

தமிழன்பன் அவர்களின் கவிதை வரிகள் இவை, இதில் நட்சத்திரங்களை பகலின் துண்டுகளாகப் படிமப் படுத்தியுள்ளார்.

படிமக் கவிஞர்களில் மு. மேத்தா அவர்கள் சிறந்த கவிஞராக திகழ்கிறார். அவருடைய கவிதைகளில் சமூகம் பற்றிய தெளிவான சிந்தனைப் புலப்படுகிறது. தன் மனதில் தோன்றும் கருத்துக்களைப் படிமங்களின் வாயிலாக கூறுகிறார். அவருடைய கவிதையில் காட்சிப் படிமங்கள், குறியீட்டு படிமங்கள் மற்றும் உவமைப் படிமங்கள் காணப்படுகின்றன. காட்சிப் படிமங்கள் மற்றும் குறியீட்டு படிமங்களை சென்ற இயலில் கண்டோம். உவமை படிமங்களைப் பற்றி இந்த இயலில் காண்போம்.

## உவமை

ஒரு பொருளை விளக்குவதற்கு அதனோடு ஒத்த தன்மையுடைய பொருளை எடுத்துக்காட்டிக் கூறுவது உவமை எனப்படும். உவமைக்கும் அதனால் விளக்கப்படும் பொருளுக்கும் இடையே முழுமையான ஒப்புமை இருக்க வேண்டியதில்லை என்கிறார் தொல்காப்பியர்.

**'வினைபயன் மெய்உரு என்ற நான்கே**
**வகைபெற வந்த உவமத் தோற்றம்.' (தொல்காப்பியம்.1222)**

உவமம் என்பது புலனாகாதன புலனாதற்கும், அலங்காரம் ஆகிக் கேட்டவர்க்கு இன்பம் பயப்பதற்கும் வரும் என இளம்பூரணர் உவமையின் பயன்பாட்டைப் பற்றி கூறுகின்றார். உவமை வினை, பயன், மெய், உரு என்ற நான்கு பொருள் காரணமாக வரும்.

**'உயர்ந்ததன் நிலைக்களன்க உள்ளுங்காலை' (தொல்.1224)**

உவமையின் நிலைக்களன்கள் சிறப்பு, நலன், காதல், வலிமை என்ற நான்கினையும் பெற்று உயர்ந்த பொருளின் மேல் தோன்றும்.

**'சிறப்பே நலனே காதல் வலியோடு**
**அந்நாற்பண்பும் நிலைக்களம் என்ப.' (தொல்.1225)**

என்று தொல்காப்பியர் உவமையின் இலக்கணத்தைக் கூறுகிறார். தமிழ் அணிநூல்களில் அணிகள் 32க்கு மேல் கூறப்பட்டாலும் பழைமை வாய்ந்த உவமை அணியே தலைமை அணியாகக் கருதப்படுகிறது. '**உவமை**' தலைமை அணி என்று அப்பைய தீட்சிதர் சித்திர மீமாம்சையில் விளக்கியுள்ளார். உவமை அனைத்து அணிகளையும் உள்ளடக்கியது என்பது தெ. பொ. மீனாட்சிசுந்தரம் அவர்களின் கூற்றாகும்.

**'உவமை என்ற சொல்லின் பிறப்புப் பற்றி ஆய்தவர்கள் உவ + மை எனப் பிரித்து 'உவ' எனின் மகிழ்ச்சி தருவது என்பதனடியாகப் பிறந்த தமிழ்ச் சொல் என்றும், 'இரண்டு' என்றும் பொருளுடைய 'உப' என்னும் சொல்லின் அடியாக இரு பொருள்களின் ஒப்பீடு எனும் வகையில் 'உபமா' என்னும் வட சொல்லின் அடியாகப் பிறந்தது என்றும் குறிப்பிடுகின்றார். உவமை, ஓவியம் இரண்டும் ஒப்பு என்ற சொல்லின் அடியாகப் பிறந்தவை எனலாம். ஒப்பு, ஒவ்வு, உவமை என்றும், ஒவ்வு ஓவியம் என்றும் ஆகியிருக்கலாம். இவ்வகையில் உவமை, ஓவியத்திற்கு ஒப்பானதாகிப் படிமம் என்ற பொருள் தருகிறது.'**[3] என்று மு. சுதந்திரமுத்து கூறுகிறார்.

## உவமைப் படிமம்

உவமைகள் காட்சித் தன்மையானவை, கருத்துக் தன்மையானவை என்று இருவகையாக பிரிக்கலாம். இதில் காட்சித் தன்மையானவை உவமைப் படிமங்கள் என்றும் கருத்துத் தன்மையான உவமைகள் வெறும் உவமைகள் என்றே கொள்ளப்படும். இவை மெய், உரு, வினை, பயன் என்ற பண்புகளின் அடிப்படையில் கவிதையில் இடம் பெறுகின்றன. அவற்றை, படிமங்கள் ஆகாத உவமைகள், படிமங்கள் ஆகும் உவமைகள் என்று இருவகைப் படுத்துகிறார் சுதந்திரமுத்து அவர்கள்.

### படிமங்கள் ஆகாத உவமைகள்

காட்சிப் பொருளுக்குக் கருத்துப் பொருளும், கருத்துப் பொருளுக்குப் கருத்துப் பொருளும் தருகின்ற உவமானங்கள் காட்டுகின்ற உவமைகள் படிமம் ஆவதில்லை. ஏன்னென்றால் இந்த உவமானங்கள் கருத்துத் தன்மையுடையவை என்பதால் மெய் உரு வினை பயன் ஆகியவைகளைக் காட்சிப்படுத்திக் காட்டுவதில்லை. காட்சிப் பொருளுக்குக் கருத்துப் பொருள் உவமை காட்டுகிற போது, மெய், உரு, வினை, பயன் என்ற நான்கில் மட்டும் உவமை வரும், கருத்துப் பொருளுக்கு கருத்து பொருள் உவமை காட்டுகிற இடத்தில் வினை, பயன் என்ற இரண்டில் மட்டுமே உவமை தோன்றும். ஏனெனில் மெய், உரு ஆகிய இரண்டும் காட்சிப் பொருள்கள் ஆகும்.

**'நீண்டு வளர்ந்து போகின்ற**
**வார்த்தைகள் போல**
**போய்க்கொண்டே இருக்கின்ற**
**தெருக்கள்** **(வ. சுப்பிரமணியன், பாதச் சலங்கைகள், ப.33)**

**இதில் காட்சிப் பொருளான தெருவின் தோற்றம், 'வார்த்தை என்ற கருத்துப்பொருள் ஓப்பீட்டால் காட்சி தருவதில்லை.'**[4]

### படிமங்கள் ஆகும் உவமைகள்

உவமையில் படிமம் அமைய வேண்டுமென்றால் உவமேயம் காட்சிப் பொருளாகவோ, கருத்துப் பொருளாகவோ இருக்கலாம்; ஆனால், உவமானம் காட்சிப் பொருளாக மட்டுமே இருக்க வேண்டும். எனவே உவமைப் படிமம் என்பது காட்சிப் பொருளுக்குக் காட்சிப் பொருள், கருத்துப் பொருளுக்குக் காட்சிப் பொருள் என இருவகையாகக் கொள்ளலாம். இதில் காட்சிப் பொருளுக்கு காட்சிப் பொருளாகும் படிமங்கள் மெய், உரு, வினை, பயன் என நான்கு வகையிலும்,

கருத்துப் பொருளுக்குக் காட்சிப் பொருளாக வினை, பயன் ஆகிய இரண்டு வகையாகவும் உவமை படிமங்கள் அமைகின்றன.

## 1. காட்சிப் பொருளுக்குக் காட்சிப் பொருள்

'சுருக்கிய
குடையைப் போலத்
தோன்றும்
அசோக மரமே' (ஆர். எஸ். மூர்த்தி, வலைகள், ப.94)

சுருங்கிய குடையின் தோற்றத்துடன் அசோக மரத்தின் தோற்றம் மெய் ஒப்பீடு பெற்று இரண்டும் இணைந்து அசோகமரம், படிமத்தில் காட்சித் தெளிவு பெறுகிறது. ஒப்பீட்டால் புதுமை தோன்றுவதால் படிமம் எளிதாக அமைகிறது."[5]

## 2. கருத்துப் பொருளுக்கு காட்சிப் பொருள்

"என் வாழ்வோ
தூறைவிட்ட
நோட்டீஸுகளாய்
வறுமை மீது
மோதிச் சிதறி
கீழே விழுந்தது. (தேவதேவன், மின்னற்பொழுதே தூரம், ப.59)

வாழ்க்கை வீணாவதைச், தூறைவிடப்பட்ட நோட்டீஸுகளுடன் ஒப்பிட்டு, அந்த வாழ்வு மதிப்பும், அர்த்தமின்றி இனித் தேறும் நம்பிக்கையுமின்றிப் போவதை இப்படிமம் படம்பிடிக்கின்றது."[6]

## மு. மேத்தாவின் கவிதைகளில் படிமங்கள் ஆகாத உவமைகள்.

காட்சிப் பொருளுக்குக் கருத்துப் பொருளும், கருத்துப் பொருளுக்குப் கருத்துப் பொருளும் தருகின்ற உவமானங்களை காட்டுகின்ற உவமைகள் படிமம்

ஆவதில்லை. மு. மேத்தாவின் கவிதைகளிலும் படிமம் ஆகாத உவமைகள் காணப்படுகின்றன.

**'கடல் நீர் தெளிவுடையதாக இருந்தாலும் நீர் வேட்கை உடையவர் பருகார். ஆடும் மாடும் பறவையும் பிறவும் சென்று நீர் பருகுதலால் கலங்கிச் சேறொடு கிடப்பது ஆயினும் வறிய நீர்க் கேணியையே விரும்பிச் சென்று பருகுவர். அது போல் மிகுந்த செல்வம் படைத்தவர் எனினும் அவரைத் தேடிச் செல்லாமல் கொடைத் தன்மையுடையார் எளியராக இருந்தாலும் அவரிடமே வறுமையாளர் செல்வர்.**

**'தெண்ணீர்ப் பரப்பின் இமிழ்திரைப் பெருல்கடல்**
**உண்ணார் ஆகுப நீர்வேட் டோரே**
**ஆவும் மாவும் சென்றுணக் கலங்கிச்**
**சேறொடு பட்ட சிறுமைத்து ஆயினும்**
**உண்ணீர் மருங்கின் அதர்பல ஆகும்'[7]** **(புறநானூறு.204)**

கி. பழனியப்பர் அவர்கள் தங்களை நாடி வருபவர்களுக்கு முதலில் உணவளித்து பிறகு அவர்களின் துன்பதிற்கு ஏற்றவாறு உதவ கூடியவர். நூலகங்களுக்கு சென்றால் அறிவு பசி நீங்கும். கி. பழனியப்பர் இல்லத்திற்கு சென்றால் வயிற்று பசி நீங்கும். புறநானூறு கருத்தை சார்ந்து வரும் மேத்தாவின் **'அமுத நூலகம்'** என்னும் கவிதை,

**'அறநெறி அண்ணல் – ஓர்**
**அமுத நூலகம்**
**ஆயிர மாயிரம்**
**வயிறுகள் – அதன்**
**வாசகர்கள்'[8]**

இதில் கருத்துப் பொருளுக்கு கருத்துப் பொருளான உவமை வந்துள்ளது. நூலகத்தையும் பழனியப்பரின் இல்லத்தையும் ஒப்பிடும் போது உவமை

தோன்றுகிறது. காட்சி தோன்றவில்லை காட்சிப்படுத்தினால் மட்டுமே படிமம் தோன்றும்.

'**கோடும் கோலமும்**' என்ற கவிதையில் ரோமாபுரி எரிந்த போது நீரோ பிடில் வாசித்தான். மக்களின் புரட்சியால் சர்வதிகார ஆட்சி வீழ்த்தப்பட்டது. மதுரை எரிந்த போது மாதவி யாழ்வாசிக்கவில்லை வாசிப்பதையே நிறுத்திவிட்டாள். ரோமாபுரி மற்றும் மதுரை நீதியை நிலைநாட்ட எரிக்கப்பட்டது என்கிறார் மு. மேத்தா.

**'கோடிய கோலினன் செருமுகம் போலக்**
**கனைகதிர் திருகிக் கல்சேர்ந்து முறைபுக (கல்லாடம்.36)**

**மக்கள் நலங் கருதாமல் ஆண்டு, கேடுகள் செய்த கொடுங்கோல் வேந்தன் பகைவரின் போர்க்களத்தில் தக்க பாதுகாப்பு இன்றிப் பட்டழிவது, மலையிடை மறைந்து போய்க் கடலிடை வீழும் கதிரொளி போன்றது.'**[9] மக்களின் நலம் கருதாமல், நீதி தவறி நடந்ததால் ரோமாபுரியும், மதுரையும் நெருப்பில் எரிந்தது என்று கருத்தைக் கூறும் கவிதை,

'ரோமாபுரி பூம்புகார்
இரண்டிலும்
பெருமை தந்த நகர்
எந்த நகர் தெரியுமா ?
பூம்புகார் தான்

ஏனென்றால்
ரோமாபுரி எரிந்த போது
நீரோ பிடில் வாசித்தான்
மதுரை எரிந்த போது
மாதவி யாழ் வாசிக்கவில்லை

மாறாக

அன்று முதல்

யாழ் வாசிப்பதையே

நிறுத்திவிட்டாள் ![10]

இதில் ரோமாபுரி மதுரை இசைக்கும், நெருப்பினால் எரிந்ததிற்கு ஒப்புமை கூறப்படுகிறது. நீரோ பிடில் வாசித்தான், மாதவி யாழ் வாசிக்கவில்லை இசையை ஒப்புமை படுத்திய உவமைகள் ஆகும்

## மு. மேத்தாவின் கவிதைகளில் படிமங்கள் ஆகும் உவமைகள்

காட்சித் தன்மையுள்ள உவமேயத்துடன் காட்சித் தன்மையுள்ள உவமானம் சேரும் போது உருவகமும் உவமைப் படிமமாகின்றன. கருத்துத் தன்மையுள்ள உவமேயத்துடன் காட்சித் தன்மையுள்ள உவமானத்தை இணைக்கிற உருவகமும் உவமையும் படிமமாகின்றன.

**'உவமைப் படிமம் காட்சிப் பொருளுக்குக் காட்சிப் பொருள், கருத்துப் பொருளுக்குக் காட்சிப் பொருள் என இருவகையாக அமைகிறது இதிலும் காட்சிப் பொருளுக்குக் காட்சிப் பொருளாக மெய், உரு, வினை, பயன் என நான்கு வகையாகவும் கருத்துப் பொருளுக்குக் காட்சிப் பொருளாக வினை, பயன் ஆகிய இரண்டு வகையாகவும் உவமைப் படிமங்கள் அமைகின்றன.[11]**

## கருத்துப் பொருளுக்குக் காட்சிப் பொருள்

கொலை வெறி கொண்டு கையில் வாள் ஏந்திப் பிடித்தவரின் மனதில் இரக்கம் என்றும் இருக்காது. அதே போல் மற்ற உயிர்களின் உடலைச் சுவைத்து உண்டவரின் மனமும் இரக்கத்தை எண்ணிப் பார்க்காது.

**'படைகொண்டார் நெஞ்சம் போல் நன்றூக்காது ஒன்றன்**
**உடல்சுவை உண்டார் மனம். (திருக்குறள்.253)**

தகாத செயலைச் செய்ய எண்ணி ஒருவன் கையில் கத்தியை எடுத்துவிட்டான் என்றால் அவன் மனம் இறுகிப் போய் விடுகிறது. இரக்கம் என்னும் குணம் அவன் மனத்தைவிட்டு நீங்கிவிடுகிறது. தீங்கிழைப்பது ஒன்றே எண்ணமாக இருக்கும். அதுபோல, ஒருவர் மற்றதன் ஊனைத் தின்று சுவைத்து விட்டால் – கோழி, ஆடு, மாடு போன்றவற்றின் ஊனை சுவைத்து உண்டு விட்டால் – அவர் மனம் அதைப் பற்றி நினைக்கும் போதெல்லாம் அவற்றின் ஊன் சுவைதான் மனதில் இருக்குமே தவிர அதன் மேல் இரக்கம் இருக்காது.'[12]

**'பிரிந்து சென்ற பிள்ளைக்காக'** என்ற கவிதையில் கார்ப்பசேவ் சோவியத் யூனியனைப் பிரிப்பதிலேயே தன் வாழ்க்கையின் இலட்சியமாக இருந்தான். அவன் மக்களின் உயிர்களைப் பற்றிக் கவலைப்படவில்லை. **"சோவியத் அமைப்பு சரிபட்டு வராது என்று கருத்துடையவன், அந்த அமைப்பைத் தன்னால் குலைந்து விடக் கூடிய அளவுக்கு அரசியல் அதிகார ஏணியின் அடைவதையே அவன் தன் வாழ்க்கையின் குறிக்கோளாகக் கொள்கிறான்.'**[13]

கார்ல் மார்க்ஸ் சோவியத் யூனியன் உருவாக காரணமாய் இருந்தவர் வறுமையில் இருந்த போதிலும் தன் கொள்கையில் உறுதியாக இருந்து வெற்றிப் பெற்றவர். 1867 செப்டம்பர் 14ஆம் நாள் **'மூலதனம்'** என்ற புத்தகத்தை வெளியிட்டார், இதன் மூலம் உலகப் புகழ் பெற்றவர், இக்கருத்தை கூறும் பின் வரும் கவிதை,

'கார்ப்பசேவைப் பற்றி
எனக்குக்
கவலையில்லை
நான்
காரல் மார்க்ஸைப் பற்றியே
கவலைப்படுகிறேன்!.'[14]

கார்ப்பசேவ் சோவியத் யூனியன் சிதைவிற்கும், கார்ல்மார்க்ஸ் சோவியத் யூனியனை உருவாக்கியதற்கும், உவமைகளாக வந்து காட்சிப்படுத்திய உவமைப் படிமம் ஆகும். மு. மேத்தா அவர்கள் சோவியத் யூனிநனை உருவாக்கியவர் பற்றியே எனது கவலை. சோவியத் யூனியனை பிரித்தவரைப் பற்றி எனக்கு கவலையில்லை என்கிறார்.

## காட்சிப் பொருளுக்குக் காட்சிப் பொருள்

**'தேசத்தைப் போலவே நம் வாழ்க்கையும் தெருவில் நிற்கிறது'** என்ற கவிதை கணவனைப் பிரித்து மனைவி வாழ்கின்ற வாழ்க்கைப் பயனற்றது என்று கூறுகின்றது.

**'மழையைக் கொடுக்காத**
**இடியால் என்ன பயன் ?**
**சமாதானத்தில் முடியாத**
**சண்டைகளால்**
**யாருக்கு லாபம் ?**
**கரையைப் பற்றிக் கொள்ளாமல்**
**நதி மகளே உன்னால்**
**நடக்க முடியுமா ?'**[15]

மழையை கொடுக்காத இடியும், சமாதானத்தில் முடியாத சண்டையும் பயன் இல்லாதது. கரையைச் சேராத நதியினால் பயன் இல்லை. அது போல கணவனை சேராத மனைவியின் வாழ்க்கை பயன் இல்லாதது ஆகிவிடும். இக்கருத்தையே பின் வரும் கலித்தொகை பாடல் கூறுகிறது.

**'பலவுறு நறுஞ்சாந்தம் படுப்பவர்க் கல்லாத**
**மலையுளே பிறப்பினும் மலைக்கவை தாம் என் செய்யும்**
**நினையுங்கால் நும்மகள் நுமக்குமாங் கனையளே.**
**சீர்கெழு வெண்முத்தம் அணிபவர்க் கல்லதை**

நீருளே பிறப்பினும் நீர்க்கவைதாம் என் செய்யும்
தேருங்கால் நும்மகள் நுமக்குமாங் கனையளே.
ஏழ்புணர் இன்னிசை முரல்பவர்க் கல்லதை
யாழுளே பிறப்பினும் யாழ்க்கவைதாம் என் செய்யும்
குழுங்கால் நும்மகள் நுமக்குமாங் கனையளே (கலித்தொகை.9)

நறுமணமுடைய சந்தனம் தன்னைப் பூசியவர்க்கு அன்றித் தான் பிறந்த மலைக்குச் செய்யும் பயன் என்ன ? தண்ணிய முத்து தன்னை அணிவார்க்கு அன்றித் தான் பிறந்த கடலுக்குச் செய்யும் பயன் என்ன ? ஏழு நரம்புகளால் கூட்டப்பெற்ற இன்னிசை கேட்பவர்க்கு அன்றித்தான் பிறந்த யாழுக்குச் செய்யும் பயம் என்ன ? தலைவனுக்கு இன்பூட்ட வேண்டிய தலைவியைத் தலைவனுடன் செல்லவிடாமல் தடுத்து நிறுத்துவதால் பெற்றோர் பெறும் பயன் என்ன ?'[16]

**'தேசத்தைப் போலவே நம் வாழ்க்கையும் தெருவில் நிற்கிறது'** என்ற கவிதையில் மழை, இடி, கரை, நதி ஆகியவை படிமங்களாக வந்துள்ளது. கரை ஆணிற்கும், நதி பெண்ணிற்கும், பயனைக் கருதி வந்த உவமைப் படிமங்களாகும்.

**'மாம்பழ ஊரில் மனக் குயில்கள் அழுகின்றன'** என்ற கவிதையில் வந்தியெனும் பெண்ணிடம் வாங்கித் தின்ற பிட்டுக்காக சிவ பெருமான் மண் சுமந்தார் பாண்டிய மன்னனிடம் பிரம்படிபட்டார், அது போல இந்திய மக்களின் சுதந்திரத்திற்காக ஆங்கிலேயரிடம் காந்தியடிகள் பிரம்படி பட்டார் . சிவ பெருமான் மீது பட்ட அடி எப்படி உலக ஜீவ ராசிகளின் மீது விழுந்ததோ, அதைப் போலவே காந்தியடிகள் மீது பட்ட அடி இந்திய மக்கள் அனைவரின் மீதும் பட்ட அடியாக மு. மேத்தா கூறுகிறார்.

'பிட்டுக்கு மண் சுமந்தவன்
பட்ட பிரம்படி போல
உன் மீது பட்ட அசிங்கம்
ஒவ்வொருவன் கழுத்தில்

**செருப்பு மாலை விழுந்த போது உன்**

**பாதச் செருப்புகள் பட்ட இடமெல்லாம்**

**பூந்தோட்டங்களாகிப் புலம்பத் தொடங்கின.'[17]**

பாண்டிய நாட்டில் ஏற்பட்ட வெள்ளப் பெருக்கு காரணமாக பாண்டிய மன்னன் வீட்டுக்கொருவரை அணைக் கட்டுவதற்கு வரவேண்டும் என்று ஆனையிட்டான். வந்தி என்னும் மூதாட்டி தன்னால் மண் சுமக்க முடியாது என்று ஈசனை வேண்டினாள் ஈசனே வந்திக்காக மண் சுமக்க வந்தான் என்று திருவிளையாடற் புராணம் கூறுகிறது.

**'கண்டனன் கனன்று வேந்தன் கையில் பொன் பிரம்பு வாங்கி**

**அண்டமும் அளவு இலாத உயிர்களும் ஆகம் ஆகக்**

**கொண்டவன் முதுகில் வீசிப் புடைத்தனன் கூடையோடு**

**மண் தனை உடைப்பில் கொட்டி மறைந்தனன் நிறைந்த சோதி.**

**(திருவிளையாடல் புராணம்.3226)**

சிவன் வந்தியிடம் வாங்கித் தின்ற பிட்டிற்காக மண் சுமந்தார். மண் சுமந்த களைப்பு மேலிட அசதியால் தூங்கிவிடுகிறார். அணைக் கட்டும் இடத்திற்கு வந்த பாண்டிய மன்னன், வேலை செய்யாமல் தூங்கிக் கொண்டு இருக்கும் சிவ பெருமான் முதுகில் பிரம்பால் அடித்து விடுகிறான் சிவன் மீது பட்ட அடி ஒவ்வொரு ஜீவராசிகளின் மீதும் பட்டது. **'மாம்பழ ஊரில் மனக் குயில்கள் அழுகின்றன'** என்ற கவிதையில் பிட்டு – சுதந்திரத்திற்கும், சிவபெருமான் – காந்தியடிகளையும், பாண்டியன் – ஆங்கிலேயரையும் குறிக்கின்ற உவமைப் படிமங்களாகும்.

**'காவல்'** என்னும் கவிதையில் மு. மேத்தா அவர்கள் விழிகள் சுதந்திரமாய் வானத்தைப் பார்கிறது. உன் கைவிரல்களோ சுதந்திரமில்லாமல் வீட்டிற்குள்ளேயே அடைப்பட்டு கிடக்கிறது, அது போல இந்திய மக்கள் சுதந்திரம் இல்லாமல் இந்திய நாட்டிலேயே அடிமைகளாய் இருக்கின்றனர் என்ற கருத்தைக் கூறுகிறார்.

**‘விழிகள்**

**நட்சத்திரங்களை வருடினாலும்**

**விரல்களென்னவோ**

**ஜன்னல் கம்பிகளோடு தான்.’[18]**

விழிகள் இந்தியாவிற்கும், நட்சத்திரங்கள் மற்றும் விரல்கள் மக்களுக்கும், ஜன்னல் கம்பிகள் சுதந்திரமில்லாததிற்கும் படிமங்களாய் காட்சித் தரும் உவமைப் படிமமாகும்.

**‘மலர் செறிவில்லாத சோலையும், தாமரை மலராத பொய்கையும், பிறை தோன்றாத வானமும் மக்கள் இல்லாத இல்வாழ்வும் ஒப்பானவையேயாம்.**

**தொக்கிள மலர்துதை விலாத சோலையும்**

**புங்கிளந் தாமரை நகாத பொய்கையும்**

**மிக்கிளம் பிறைவிசும் பிலாத அந்தியும்**

**மக்களை இலாத்தோர் மனையும் ஒக்குமே.’[19] (சூளாமணி:413)**

சூளாமணியில் வரும் பாடல் குழந்தைச் செல்வம் இல்லாத வாழ்வு ஒரு வாழ்வல்ல என்று கூறுகிறது. ஆனால், **‘தாய் மொழியில் தாலாட்டு’** என்ற கவிதையில் ஆணும் பெண்ணும் சுகங்களை மட்டுமே சொந்தமாக்கிக் கொண்டு அதன் பயனாக பெற்ற குழந்தையை அசிங்கம் என்று விட்டுவிடுகிறார்கள்.

**‘வீணைகளை மீட்டி**

**ரசிக்கும் நீங்கள்**

**அதன்**

**ஸ்வரங்களை மட்டும்**

**அபஸ்வரம் என்பதோ ?.’[20]**

இதில் வீணை ஆண் பெண் இருவரின் கூடலையும், சுவரங்கள் குழந்தையையும் உவமையாக காட்சிப்படுத்தி வந்த உவமைப் படிமங்களாகும்.

**'உதிரும் கனவுகள்'** என்னும் கவிதை களிமகள் எனப்படும் பரத்தையரின் ஆசைகளையும், துன்பங்களையும் விளக்குகிறது. திருத்தக்க தேவர் விலைமகள் என்று அழைக்கப்படும் பரத்தையரைப் களிமகள் என்று கூறுகிறார். அவர்களும் ஒழுக்க நெறியோடு தான் வாழ்ந்தார்கள் என்று கூறுகிறார்.

**'களிமகள் நேசம்நல்லா கைப்பொருள் கள்வர் கொள்வர்' (நரிவிருத்தம்:15:3)**

விலைமகளின் நிலையை விளக்க வரும் இக்கவிதை, படகில் ஏற்றி வைத்த சுமையால் படகு நகருவதற்கு சிரமமாக இருக்கும் படகை செலுத்துபவர் தன்னுடைய இரண்டு கைகளினால் மாறிமாறி படகை செலுத்துவர், அப்பொழுதும் சுமை தாங்காமல் படகு தடுமாறும், அது போல விலைமகளும் ஆடவரிடம் கூடுகிறாள். துடுப்பு கைமாறுவதை போல அவளும் பல ஆடவரோடு கூடுகிறாள். உணவிற்காக இவள் களிமகளாகிறாள், இவளிடம் வருபவர்களுக்கு இவளே உணவாகிறாள்.

**'இளமைப் படகுகளில்**
**ஏற்றிவைத்த சுமை சுமந்து**
**கண்ணீரின் நடுவிலொரு**
**கடற்பயணம்......அல்ல......அல்ல.......**
**உடற் பயணம்!**

**துடுப்புகள் கைமாறும்**
**சுமைதாங்க முடியாமல்**
**படகே சிலசமயம்**
**பதறும் –**
**கை கால்கள்**
**உடம்பெல்லாம்**
**உதறும்!**

**பாயைச் சுருட்டி வைத்தால்**

**பசிப் பயணம்........**

**பாய்விரித்துப் புறப்பட்டால்**

**இன்னொரு பசிக்கு**

**இரையாகும்**

**நிசிப் பயணம்.'[21]**

இங்கே படகு, துடுப்பு, பாய், பசிப், நிசிப் ஆகிய சொற்கள் படிமங்களாக வந்துள்ளது. படகு – விலைமகளையும், துடுப்பு – அவள் கைமாறுவதையும், பசி – அவளுடைய ஏழ்மையையும், நிசி – அவளே உணவாகிறாள் என்பதை உணர்த்தும் உவமைப் படிமங்களாகும்.

அறிவானது உடம்பின்றி உண்டாவதில்லை. ஆகையால் அது உடல் உறுப்புகளால் உற்பத்தியாவதேயாகும், அதனால் உடலைக் கொண்டு அதற்கேற்ற சாதனம் செய்ய வேண்டியது அவசியமாகிறது.

**'உடம்பினால் அன்றி உணர்வு தான் இல்லை**

**உடம்பினால் உன்னியதே யாம்.' (ஔவை குறள்.உடம்பின் பயன்.15)**

உடம்பின் பயனைக் கொண்டு களிமகள் தன் வாழ்க்கையை நடத்திகிறாள் என்று **'உதிரும் கனவுகள்'** என்னும் கவிதையில் மு. மேத்தா கூறுகிறார். மேலும், அவர் படகை களிமகளுக்கு உவமையாக கூறுகிறார். படகில் ஏறி பயனம் செய்பவர்கள் கரையை சென்றடைகிறார்கள், கரையை சென்றடைந்ததும் படகு கயிறுகளால் கட்டப்படுகிறது, அது போல களிமகளும் தன்னிடம் வருபவர்களுக்கு இவள் படகாகிறாள். படகு கூட கயிறுகளாள் கட்டப்படுகிறது நமக்கு மூன்று முடிச்சுகள் போடுபவர்கள் இல்லையே என ஏங்குகிறாள் என்று கூறுகிறார்.

**'கரைசேர நினைத்துக்**

**கலங்கும் படகுகளைச்**

**செலுத்துவோர்**

**கரைசென்று சேர்வதுண்டு**

அப்போது.......

படகுகள் வெறும்

பார்வையாளர்கள் தான்!

கட்டுப்பட்டிருக்கும்

கட்டைப் படகுக்குக்

கால்முளைத்து விட்டால்

கரையேறி விடுமென்று

கயிறுகளால் இறுக்கிக்

கட்டி வைத்து

முடிச்சுப் போடுகிறார்கள்

படகுகள் அப்போது

முணுமுணுத்துக் கொள்ளும்:

'நாங்கள் வேண்டுவதும்

முடிச்சுகள் தான்

மூன்று முடிச்சுகள்!'[22]

இதில் படகு – களிமகளுக்கும், கயிறு – மாங்கல்யத்திற்கும், முடிச்சுகள் – திருமணத்திற்கும் உவமையாக வந்து காட்சிப்படுத்திய உவமைப் படிமங்களாகும்.

'அருகே இருக்கும் பெருமக்களை அறிந்து பழகி நற்பயன் பெறாமல், ஒருவன் காலம் கழிப்பது, தன்னூரிலே இருக்கும் ஓரே ஒரு தன்மையால் தண்ணறும் சுனை நீரை நன்னீரெனக் கருதாமல் கழிப்பவன் அறிவில்லாத் தன்மை போன்றது.

பாரி பறம்பிற் பணிச்சுனைத் தெண்ணீர்

ஓருர் உண்மையின் இகழ்ந்தோர் போலக்

காணாது கழிந்த வைகல் காணா

வழிநாட்கு இரங்கும்என் நெஞ்சம்அவன்

கழிமென்சாயல் காண்டொறும் நினைத்தே'[23] (புறநானூறு.176)

புறநானூற்றின் கருத்தை ஒத்து வரும் **'கோடம்பாக்கம்'** என்னும் கவிதையில் நடிகை நடிகர்களைப் பின் தொடர்ந்து ரசிகர்கள் செல்கிறார்கள் என்பதை விளக்குகிறது. மலர்களைச் சுற்றி வண்டுகள் இருப்பதைப் போல திரைப்பட நடிகர்களைச் சுற்றி ரசிகர்கள் செல்கிறார்கள். தேன் கிடைக்காமல் வண்டுகள் வாடுவதைப் போல திரைப்பட நடிகர்களைக் காணச் சென்ற ரசிகர்கள் அவர்களைப் பார்க்க முடியாமல் வாடுகிறார்கள்.

**'அடடா.... இது ஓர்**
**அதிசய நந்தவனம்**
**மலர்களெல்லாம்**
**சிறகடிக்கின்றன**
**பின் தொடர்கின்ற**
**வண்டுகள் தான்**
**வாடி உதிர்கின்றன!'**[24]

இங்கே மலர்கள் திரைப்பட நடிகர்களுக்கும் வண்டுகள் ரசிகர்களுக்கும் உவமைகளாக வந்துக் காட்சிப்படுத்தும் உவமைப் படிமங்களாகும்.

**'ஒரு சின்னக் குழந்தையின் கையில் புத்தகம் இருந்தால் பார்ப்பவர்கள் என்ன சொல்லுவார்கள். "குழந்தை....சமத்தா இருக்கணும். புத்தகத்தைக் கிழிச்சிடக் கூடாது" என்பார்கள். ஆனால் கவிக்கோ அப்துல் ரகுமான் வித்தியாசமாக கவலைப்பட்டார்.**

**புத்தகங்களே சமர்த்தாக இருங்கள்**
**குழந்தைகளைக் கிழித்து விடாதீர்கள்.'**[25]

இக்கருத்தையே மு. மேத்தா அவர்களும் **'முதுகில் ஒரு மூட்டை'** என்னும் கவிதையில் கூறுகிறார். குழந்தைகள் பள்ளிக்கு அதிகமான பாடப்புத்தகங்களை எடுத்துச் செல்கிறார்கள். அது அவர்களுக்கு சுமையாக இருக்கிறது. பள்ளியில்

அவர்கள் அகப்பட்டு இருப்பது சீதை அசோகவனத்தில் சிறைப்பட்டு இருப்பதைப் போல உள்ளது என்கிறார்.

**'மேதைகள்**

**இப்போது**

**சீதைகள் மாதிரி**

**சிறை யிருக்கிறார்கள்**

**அசோக வனத்திலல்ல**

**சோகவனத்தில்!**[26]

இங்கே சீதை குழந்தைகளுக்கும், சிறை பள்ளிகளுக்கும் வந்து காட்சிப்படுத்திய உவமைப் படிமங்களாகும்.

உழவர்கள் உலகத்தின் இதயத்துடிப்பு போன்றவர்கள், இதயம் நின்றுவிட்டால் உடல் இயக்கம் நின்றுவிடும். உழவர்கள் தங்கள் தொழிலைச் செய்யாது நிறுத்திவிட்டால், இந்த உலகம் இயங்காது நின்று விடும் என்று திருவள்ளுவர் கூறுகிறார்.

**'உழுவார் உலகத்தார்க்கு ஆணிஅஃதற்றாது**

**எழுவரை எல்லாம் பொறுத்து.** **(திருக்குறள்.104)**

**உழவுத் தொழிலைச் செய்யாது, வேறு தொழில் செய்து வாழ்க்கை நடத்து பவருக்கு அச்சாணியாக இருந்து அவர்களைத் தாங்குதலால், உழவர் உலகத்தாருக்கு அச்சாணி போன்றவர் உறுதியானவர்கள். அவர்கள் அச்சாணி போல் உறுதியாகத் தங்களது தொழிலில் ஈடுபட்டு இருப்பதால் தான் உலகத்தில் மற்ற தொழிலில் ஈடுபட்டு இருப்பவர்கள் நிலையாக, நிம்மதியாகத் தங்கள் தொழிலில் ஈடுபட்டுள்ளார்கள்.'**[27]

**'சொற்கள்'** என்னும் கவிதையில் மு. மேத்தா அவர்கள் உழவனுக்கு கவிஞரையும் நெற்பயிர்களுக்கு கவிஞனின் கவிதைகளையும் உவமையாக

கூறுகிறார். உழவன் வயலில் உழுது விதை நெல்லை விதைக்கிறான். அதனால் நெற் பயிர்கள் விளைய தொடங்குகின்றன. அது போல கவிஞனும் தாள்களில் எழுதுகோலால் அவனது எழுத்துக்களை விதைக்கிறான் கவிதைகள் என்னும் பயிர் விளைய தொடங்குகிறது.

**'உழவனின் ஏர் முனை**
**உழத் தொடங்கினால்**
**கழனிப் பெண் – அவள்**
**கர்ப்ப மடைகிறாள்.**

**தாள்களைப் பேனா**
**தழுவத் தொடங்கினால்**
**எங்கள்**
**பேப்பருக்குக் கூடப்**
**பிரசவ வேதனை.'**[28]

இங்கே உழவன் கவிஞனுக்கும், கர்ப்பம் – பயிர்களுக்கும், பிரசவவேதனை – கவிதைகளுக்கும் வந்துள்ள உவமைப் படிமங்களாகும்.

**'கதிரோன் மறைந்ததும் தாமரை முதலிய பூக்கள் குவியும் அவை, காதலன் பிரிவு உண்டான போது கூம்பும் கற்புடைய மகளிர் முகம் போன்றன.**

**காதலார் அகன்ற போழ்தில்**
**கற்புடை மகளிர் போலப்**
**போதெலாம் குவிந்த பொய்கைத்**
**தாமரை பொலிவு நீங்க.'**[29] **(சூளாமணி.1029)**

**'நடந்த நாடகங்கள்'** என்னும் கவிதை நூலில் மு. மேத்தா அவர்கள் பெண்ணின் முகத்தை குளத்தில் பூத்து இருக்கும் தாமரைப் பூவோடு ஒப்பிடுகிறார்.

குளத்தில் தாமரைப் பூ பூப்பது போல ஜன்னல்களில் பெண்ணின் முகம் தெரிகிறது என்கிறார்.

**'கம்பிகளால் ஆன**

**குளங்களைக்**

**கண்டு கொண்டேன்**

**உன்**

**தாமரை முகம் மலரும்**

**ஜன்னல்கள்**

**என்று!'**[30]

இங்கே தாமரை – பெண்ணிற்கும், குளம் – ஜன்னல் கம்பிகளுக்கும் உவமையாக வந்து காட்சிப்படுத்திய உவமைப் படிமங்களாகும்.

## முடிவுகள்

படிமம் என்ற சொல் **'இமேஜ்'** என்பதைக் குறிக்கும் என்று நாம் முன்பே கண்டோம். படிமம் 1960களில் தான் கவிதைகளில் இடம் பெறத்தொடங்கியது. ஆனால் படிமம் என்ற பெயர் இல்லாமலேயே திருக்குறள், சங்க இலக்கியங்கள், தொல்காப்பியம், திருத்தொண்டர் புராணம் போன்றவைகளில் படிமமங்கள் இடம் பெற்று இருக்கின்றன.

**'விண்ணெழுத்து = குற்றம்,**

**ஆகாயத்தில் எழுதும் எழுத்து அழிந்து விடுவது போல, களவுக்காலத்தில் அஞ்சி மறைந்து ஒழுகின குற்றம், கற்புக் காலத்தில் அழிந்து ஒழிவதாயிற்று என்று தலைவன் வியந்து கூறும் நிலையும் உண்டு என்கிறார் தொல்காப்பியர்.**

**"அந்தரத்து எழுதிய எழுத்தின் மான**

**வந்த குற்றம் வழிகெட ஒழுகல்"**

**என்பது அந்நூற்பாவின் பகுதி, களவின் கண் உண்டாக்கிய குற்றம் கற்பில் இல்லாமல் போகும் என்ற கருத்துப் பொருளை தெளிவுறுத்துவதற்கு விண்ணில் எழுதும் எழுத்துக் தோன்றாது அழிந்துவிடும் நிலையைத் தொடர்பு படுத்தியிருப்பதால் இது கருத்துப் படிமம் ஆகியது.**'[31] இவை கருத்துப் பொருளுக்குக் காட்சிப் பொருளாய் அமைந்த உவமைப் படிமமாகும். தொல்காப்பியர் காலத்தில் தொடங்கிய படிமங்கள் வேர் விட்டு பிரமிள், அப்துல்ரகுமான், மு. மேத்தா போன்ற எழுத்து இயக்க கவிஞர்களின் காலத்தில் பயிராகி, இக்காலக் கவிஞர்களாள் செழிப்புற வளர்ந்து வருகிறது எனலாம்.

# அடிக்குறிப்புகள்

1. அ. மார்க்ஸ், எது கவிதை, ப.36
2. மு. மேத்தா, ஊர்வலம், ப.86
3. மு. சுதந்திரமுத்து, படிமம், ப.130
4. மேலது, ப.111
5. மேலது, ப.113
6. மேலது, ப.114
7. இரா. இளங்குமரனார், உவமை வழி அறநெறி விளக்கம், ப.91
8. மு. மேத்தா, இதயத்தில் நாற்காலி, ப.61
9. இரா. இளங்குமரனார், முன்னூல், ப.10
10. மு. மேத்தா, ஊ., ப.27
11. மு. சுதந்திரமுத்து, முன்னூல், பக்.112,113
12. கி. இராஜேந்திரன், திருக்குறள் உவமை நயம், ப.46
13. எம். ஏ. நுஃமான் உசேன், சோவியத் யூனியன் உடைவு, ப.18
14. மு. மேத்தா, கனவுக் குதிரைகள், ப.54
15. மு. மேத்தா, கண்ணீர் பூக்கள், ப.46
16. இரா. இளங்குமரனார், முன்னூல், பக்.29,30
17. மு. மேத்தா, க.பூ., ப.17
18. 'மேற்படி நூல் ', ப.91
19. இரா. இளங்குமரனார், முன்னூல், ப.52
20. மு. மேத்தா, க.கு., ப.101
21. மு. மேத்தா, அவர்கள் வருகிறார்கள், ப.70
22. 'மேற்படி நூல் ', பக்.70,71
23. இரா. இளங்குமரனார், முன்னூல், ப.160
24. மு. மேத்தா, ஒரு வானம் இரு சிறகு, ப.61
25. சுகிசிவம், வெற்றி நிச்சயம், ப.71

26. மு. மேத்தா, ஒ.இ.சி., ப.21

27. கி. இராஜேந்திரன், முன்னூல், ப.214

28. மு. மேத்தா, முகத்துக்கு முகம், ப.55

29. இரா. இராஜேந்திரன், முன்னூல், ப.32

30. மு. மேத்தா, நடந்த நாடகங்கள், ப.14

31. பா. சிவநேசன், தமிழாய்வுத் திறங்கள், ப.20

# முடிவுரை

இலக்கியத்தில் இருக்கும் எந்த வடிவத்திற்கும் இல்லாத தனிச்சிறப்பு கவிதைக்கு உண்டு, கவிதை என்பது ஒரு கதையாகவோ, ஒரு தத்துவமாகவோ, ஒரு மருத்துவக் குறிப்பாகவோ, ஒரு கணித வாய்ப்பாடாகவோ, ஒரு உரையாகவோ, ஒரு நாடகமாகவோ, ஒரு பதிலாகவோ, ஒரு கேள்வியாகவோ இருக்கலாம். ஒரு மொழியின் செழுமையும், வளமையும், வலிமையும், செறிவையும் கவிதையால் மட்டுமே எடுத்தியம்ப இயலும்.

கவிஞர்கள் கவிதைகளை எழுத வேண்டியவர்களே தவிர, தீர்வுகளைத் தர வேண்டியவர்களல்லர் என்ற ஒரு கருத்து நிலவுகிறது. ஆனால், இதையும் தாண்டி நடை முறையில் பல கவிஞர்கள் சிறந்த சிக்கல்களுக்கு உரிய தீர்வுகளைத் தருகிறார்கள் என்பதே உண்மை ஆகும் தமிழ் மொழியால் மட்டுமின்றி உலகின் எல்லா மொழிகளிலும் இது நேர்ந்திருக்கிறது. அடிமைப்பட்ட இந்தியாவில் நிலவிய பல்வேறு சிக்கல்களைக் கண்ட பாரதியார் ஆனந்தக் கூத்தாடி, வரவேற்று விடுதலை பெற்ற இந்தியா முன்னேற வேண்டும் என்பதையும் கற்பனையிலேயே கண்டு, **"முப்பது கோடி ஜனங்கள் முழுமைக்கும் பொதுவுடமை, ஒப்பில்லாத சமுதாயம் உலகத்திற்கொரு புதுமை "** என்று எழுதினார்.

ஒவ்வொரு கவிஞனும் இவ்வாறு தான் வாழும் காலத்தில் சிக்கல்களை எண்ணிப் பார்த்து அவற்றிற்குத் தீர்வைத் தேடுவதற்கு முயற்சிக்கிறான். சில கவிஞர்கள் தீர்வு எது என்பதை அறியாத காரணத்தால் அதைப் பாடுவதற்கும் முனைவதில்லை. ஆனால் உள்ளுணர்ச்சி வேகமும், சமுதாயப் பொறுப்புணர்ச்சியும் நிறைந்த கவிஞர்கள் சிக்கல்களை வெறுமனே சித்திரிப்பதோடு நின்றுவிடாமல் அவற்றைக் தீர்ப்பதற்கான வழிகளை படிமங்கள், குறியீடுகள், தொன்மங்கள் போன்ற உத்திகளின் வாயிலாக கவிதைகளில் வெளிப்படுத்துகிறார்கள்.

இந்த வரிசையில், மு. மேத்தா அவர்கள் பல்வேறு சிக்கல்களைத் தம்முடைய கவிதைகளில் ஆராய்கிறார். அவற்றை படிமங்களின் மூலம் வெளிப்படுத்தவும் செய்கிறார். சிக்கல்களைச் சித்தரிப்பதோடு நின்று விடுவதும், சமுதாயச் சீர்கேடுகளுக்கான தீர்வைக் காட்ட முயல்வதும், சோஷலிச எதார்த்த வாதம் என்று சொல்லப்படுகிறது. கவிஞர் மேத்தா எதார்த்தவாதத்தோடு நின்றுவிடாமல் தீர்வுகளைக் தரக்கூடியவராகவும் திகழ்கிறார் இதற்கு அவருடைய கவிதைகளில் பயின்று வரும் படிமங்களே சான்றுகளாகும்.

படிமம் ஒன்றை இன்னொன்றாகச் சொல்வது மனதால் அல்லது கண்களினால் காணும் நிகழ்ச்சிகளைக் காட்சிப்படுத்துவது படிமமாகும். உவமை, உருவகம், குறியீடு எல்லாமே படிமங்கள் தான் படிமத்தின் வகைகள் இவையாகும். 1960கள் வரை இதனை 'கற்பனை' என்றனர், 1960களில் எழுத்து பத்திரிகை இயக்கம் தோன்றியது இதனை **'படிமம்'** என்றனர். சொற்களால் மனதில் தோற்றுவிக்கப்படும் காட்சி அல்லது விம்பமே படிமமாகும். கவிதை படிமங்கள் மூலமே பேசுகிறது என்று **எம். ஏ. நுஃமான்** அவர்கள் கூறுகிறார்.

படிமம் வாசகனின் கற்பனை மூலமே விரிந்து முழுமை கொள்ள முடியும். கவிதையில் வருகின்ற ஒரு காட்சியை, உணர்வு தளத்தில் புரிந்து கொள்வதற்கு கற்பனைத் தளத்தில் உருவகித்து காண்பதற்கு படிமம் உதவுகிறது. கவிதையின் செறிவு என்பது வெறுமனே வடிவப்பண்பு அல்ல சுருக்கமான அல்லது செறிவான படிமத்துடன் அது எளிதாக விளங்கிக் கொள்ளப்படுகிறது. கவிதைக்கு படிமம் என்பது ஒரு வருணிப்பு உத்தியாகும். **'மு. மேத்தாவின் கவிதைகளில் படிமங்கள்'** என்ற இவ்வாய்வில் மேத்தா அவர்கள் படிமங்களின் வாயிலாக கூறுகிறார் என்பதையும், தனி மனிதனின் அன்றாட வாழ்வில் படிமங்கள் காணப்படுகின்றன என்பதைக் தன் கவிதையினால் விளக்கியவர் மு. மேத்தா என்பதை நன்குணர முடிகிறது. மு. மேத்தாவின் கவிதைகளில் படிமங்கள் என்னும் இவ்வாய்வு நான்கு இயலாக பிரிக்கப்பட்டு, முதல் இயலில் **'படிமம் ஓர் அறிமுகம்'** என்ற தலைபிலும்,

இரண்டாம் இயல் '**மு. மேத்தாவின் கவிதைகளில் காட்சிப் படிமங்கள்**' என்ற தலைபிலும், மூன்றாம் இயல் '**மு. மேத்தாவின் கவிதைகளில் குறியீட்டுப் படிமங்கள்**' என்ற தலைப்பிலும், நான்காம் இயல் '**மு. மேத்தாவின் கவிதைகளில் உவமைப் படிமங்கள்**' என்ற தலைப்பிலும் ஆய்வு செய்யப்பட்டது இவ்வாய்வின் முடிவுகள் பின் வருமாறு காணலாம்.

'**படிமம் ஓர் அறிமுகம்**' என்னும் தலைப்பில் அமைந்த முதல் இயலில் படிமம், படிமத்திற்கு அகராதி கூறும் பொருள்கள், படிமத்தின் தோற்றம் வளர்ச்சி, படிமக் கவிஞர்களின் கருத்துகள், படிமத்தின் வகைகள், தொன்மம், குறியீடு ஆகியவற்றிற்கான விளக்கங்கள் இவ்வாய்வில் கூறப்பட்டுள்ளது.

'**மு. மேத்தாவின் கவிதைகளில் காட்சிப் படிமங்கள்**' என்னும் இரண்டாம் இயலில் அரசியல் வாதிகளின் போக்கும், பெண்களின் நிலைகள், மதங்களின் வெறிகள், சுதந்திரப் போராட்டத் தியாகிகளின் தியாகங்கள் போன்றவற்றை காட்சிப் படிமங்களின் மூலம் மு. மேத்தா அவர்கள் எவ்வாறு கூறுகிறார் என்பதையும், உவமைப் படிமம் மற்றும் குறியீட்டுப் படிமத்திற்கான விளக்கங்களும், படிமம் சோழர் காலக் சிற்பக் கலையிலிருந்தே காணப்படுவதையும், கவிதைகளில் படிமங்கள் கவிதையின் சிறப்புக் கருதி வருவதையும் இவ்வாய்வில் மூலம் அறிய முடிகிறது.

'**மு. மேத்தாவின் கவிதைகளில் குறியீட்டுப் படிமங்கள்**' என்னும் மூன்றாம் இயலில் மேத்தா அவர்கள் சமூகத்தில் நிலவும் அவலங்கள், சமயம், தொன்மம், அரசியல், சுதந்திரம் பற்றியக் கருத்துகளைக் எவ்வாறு குறியீட்டுப் படிமங்களின் மூலம் கூறிகிறார் என்பதையும், குறியீடுகள் கவிதைகளின் ஒரு அங்கமாக விளங்குவதையும், கவிதையில் மட்டும் குறியீடுகள் காணப்படவில்லை சிற்பக் கலையிலும் மற்றும் பிற துறைகளிலும் காணப்படுவதையும் இவ்வாய்வின் முடிவுகள் எடுத்தியம்புகிறது.

**'மு. மேத்தாவின் கவிதைகளில் உவமைப் படிமங்கள்'** என்னும் நான்காம் இயலில் உவமைக்கான விளக்கங்களும், உவமைகள் படிமங்களில் எவ்வாறு பயின்று வந்துள்ளது என்பதையும், படிமம் என்ற பெயர் இல்லாமலே திருக்குறள், தொல்காப்பியம், சங்க இலக்கியங்கள், திருத்தொண்டர் புராணம் போன்றவற்றில் இடம் பெறுகிறது என்பதையும் இவ்வாய்வின் முடிவுகள் தெறிவிக்கின்றது.

அன்றாடப் பேச்சிலேயே ஏராளமான படிமங்கள் புழங்குகின்றன. எல்லை மீறிப் போகிறான்; கண்டுக் கொள்ளாதே; விட்டுப் பிடிக்கலாம்; எல்லாம் நம் கையில் தான் இருக்கிறது போன்ற வாக்கியங்கள் வழக்கத்தில் உள்ளது. இதில் எல்லை, காணுதல், பிடித்தல், கை போன்ற சொற்கள் படிமங்கள் ஆகும். மொழியே படிம வசப்பட்டிருப்பது தான் படிமத்தின் சிறப்பாகும். ஆகையால் படிமங்கள் கவிதைகளில் மட்டும் காணப்படுவதில்லை அனைத்து துறைகளிலும் காணப்படுகிறது. கல்லாதவர் முதல் கற்றவர்கள் வரை படிமங்களை அன்றாட வாழ்வில் பயன்படுத்துகின்றனர்.

திருவள்ளுவர் காலத்தில் தொடங்கிய படிமங்கள் வேர் விட்டு பிரமிள், அப்துல்ரகுமான், மு. மேத்தா போன்ற வானம்பாடி இயக்க கவிஞர்களின் காலத்தில் பயிராகி, இக்காலக் கவிஞர்களால் செழிப்புற வளர்ந்துள்ளது என்பதை இவ்வாய்வின் நாம் அறியும் உண்மையாகும்.

## மேலாய்வுக் களங்கள்

1. மு. மேத்தாவின் கவிதைகளில் தொன்மங்கள் – ஓர் ஆய்வு
2. மு. மேத்தாவின் கவிதைகளில் குறியீடுகள் – ஓர் ஆய்வு
3. மு. மேத்தாவின் கவிதைகளில் உவமைகள் – ஓர் ஆய்வு
4. கம்பனும் மேத்தாவும் – ஓர் ஆய்வு
5. மு. மேத்தாவின் கவிதைகளில் சிலப்பதிகாரக் கூறுகள் – ஓர் ஆய்வு.

போன்ற தலைப்புகளில் வருங்கால ஆய்வாளர்கள் தத்தம் ஆய்வினை மேற்கொள்ளலாம்.

## ஆய்வுப் பயன்பாடு

படிமங்கள் குறித்த இவ்வாய்வேடு படிமங்களின் சிறப்புகளை அறிவதற்கு இஃதோர் அறிய ஆய்வேடாகும். படிமங்கள், குறியீடுகள், தொன்மங்கள் குறித்த ஆய்வுக்கு இவ்வாய்வேடு சிறந்ததொரு பங்களிப்பாகும்.

# துணை நூற்பட்டியல்

## முதன்மை நூல்கள்


1. சத்திய மூர்த்தி – இலக்கியத்தில் படிமம், செந்தமிழ் அச்சகம், கோவை, முதற்பதிப்பு 1983.

2. சுதந்திரமுத்து – படிமம், இளவழகன் பதிப்பகம், சென்னை, முதற்பதிப்பு நவம்பர் 2001.

3. மேத்தா மு. – அவர்கள் வருகிறார்கள், கவிதா பப்ளிகேஷன், சென்னை பதிப்பு ஜூன் 2010.

4. ” – ஆகாயத்துக்கு அடுத்த வீடு, கவிதா பப்ளிகேஷன், சென்னை, ஏழாம்பதிப்பு டிசம்பர் 2012.

5. ” – இதயத்தில் நாற்காலி, கவிதா பப்ளிகேஷன், சென்னை, எட்டாம் பதிப்பு, டிசம்பர் 2012.

6. ” – ஊர்வலம், கவிதா பப்ளிகேஷன், சென்னை, பதினேழாம் பதிப்பு, டிசம்பர் 2012.

7. ” – என்னுடைய போதி மரங்கள், திருமகள் நிலையம், சென்னை, ஏழாம் பதிப்பு, அக்டோபர் 2008.

8. ” – ஒரு வானம் இரு சிறகு, கவிதா பப்ளிகேஷன், சென்னை, பத்தாம் பதிப்பு, டிசம்பர் 2011.

9. மேத்தா மு. – கண்ணீர் பூக்கள்,
கவிதா பப்ளிகேஷன்,
சென்னை,
முப்பத்தி மூன்றாம் பதிப்பு, டிசம்பர் 2011.

10. ” – கனவுக் குதிரைகள்,
கவிதா பப்ளிகேஷன்,
சென்னை,
ஆறாம் பதிப்பு, டிசம்பர் 2012.

11. ” – காத்திருந்த காற்று,
திருமகள் நிலையம்,
சென்னை,
எட்டாம் பதிப்பு, பிப்ரவரி 2008.

12. ” – நடந்த நாடகங்கள்,
குமரன் பதிப்பகம்,
சென்னை,
பதினொன்றாம் பதிப்பு, டிசம்பர் 2009.

13. ” – நந்தவன நாட்கள்,
கவிதா பப்ளிகேஷன்,
சென்னை,
பதினொன்றாம் பதிப்பு, டிசம்பர் 2012.

14. ” – முகத்துக்கு முகம்,
கவிதா பப்ளிகேஷன்,
சென்னை,
பதினொன்றாம் பதிப்பு, டிசம்பர் 2012.

## துணைமை நூல்கள்

1. அப்துல் ரகுமான் – புதுக்கவிதையில் குறியீடு,
அன்னம்,
தஞ்சாவூர்,
முதற்பதிப்பு, ஜூன் 2006.

2. அருணாச்சலம் மு. – தமிழ்ப் புதுக்கவிதைகளில் தொன்மங்கள்,
சிவகுரு பதிப்பகம்,
சென்னை, முதற் பதிப்பு, டிசம்பர் 2008.

3. இராஜேந்திரன் சி. – திருக்குறள் உவமை நலம்,
கவிதா பப்ளிகேஷன்,
சென்னை, நவம்பர் 2010.

4. இராமநாத பிள்ளை த. – உலக வரலாறு,
சைவ பிரகாச யந்திர சாலை,
யாழ்பானம் – 1951.

5. இராஜேந்திரன் இரா. – புதுக்கவிதை இலக்கணம்,
நந்தினி பதிப்பகம்,
சென்னை, இரண்டாம் பதிப்பு 2008.

6. இளங்குமரனார் இரா. – உவமை வழி அறநெறி விளக்கம்,
சங்க இலக்கியங்கள் பாகம் 2,
தமிழ் மண் பதிப்பகம்,
சென்னை, முதற் பதிப்பு 2006.

7. கதிர் மகாதேவன் – தொன்மம்,
கதிரகம் இலட்சுமி வெளியீடு,
மதுரை,
முதற் பதிப்பு – 1984.

8. கருணாநிதி மு. (உ.ஆ.) – தொல்காப்பியம் மாணவர்கான எளிய உரை,
வசந்தா பதிப்பகம்,
சென்னை,
மறுபதிப்பு 2008.

9. கவிமணி தேசிக விநாயகம் – மலரும் மாலையும்,
முல்லை நிலையம்,

சென்னை, 2005.

10. கம்பன் – கம்பராமாயணம்,
கம்பன் கழகம்,
சென்னை – 1977.

11. கோவிந்தன் கா. (உ.ஆ.) – ஐங்குறுநூறு மூலமும் உரையும்,
இலட்சுமி பதிப்பகம்,
திருவத்திபுரம் – 1938.

12. சரளா ராசகோபாலன் – இலக்கியத்தில் ஒரு பார்வை,
ஒளிப்பதிப்பகம்,
சென்னை 1985.

13. சிவநேசன் பா. – தமிழாய்வுத் திறங்கள்,
அரவிந்தன் பதிப்பகம்,
கும்பகோணம், முதல் பதிப்பு – 2006.

14. தமிழண்ணல் – சங்க இலக்கிய ஒப்பீடு,
சிந்தாமணிச் செல்வ வெளியீடு,
மீனாட்சி நிலையம், மதுரை – 1975.

15. நாராயண வேலுப்பிள்ளை (உ.ஆ.) – அகநானூறு மூலமும் உரையும்,
திருமகள் நிலையம்,
சென்னை – 2008.

16. நிர்மலா சுரேஷ் – பாலைவனப் பௌர்ணமிகள்,
பூம்புகார் பதிப்பகம்,
சென்னை,
முதற்பதிப்பு 1999.

17. நுஃமான் எம்.ஏ. – சோவியத் யூனியன் உடைவு,
இனத்துவ ஆய்வுக்கான சர்வதேச
நிலையம்,

கொழும்பு, முதல் பதிப்பு 1982.

18. பஞ்சாங்கம் க. – தொன்மத் திறனாய்வு,
அன்னம்,
தஞ்சாவூர், முதல்பதிப்பு 2005.

19. பத்மநாதன் சி. – இந்து கலாச்சாரம் கோயில்களும் சிற்பங்களும்,
இந்து சமய கலாசார அலுவலர்கள்
திணைக்கலம், கொழும்பு 2004.

20. பாலா – புதுக்கவிதை ஒரு பார்வை,
அகரம்,
சிவகங்கை 1980.

21. பிரசாந்தன் ஸ்ரீ. (ப.ஆ.) – கம்பனைப் போல்,
பூபாலசிங்கம் பதிப்பகம்,
இலங்கை,
முதற்பதிப்பு 2003.

22. புலியூர்க் கேசிகன் (உ.ஆ.) – புறநானூறு மூலமும் உரையும்,
சாரதா பதிப்பகம்,
சென்னை, முதற் பதிப்பு 2010.

23. பொன்மணி வைரமுத்து – சங்க இலக்கியத்தில் புதுக்கவிதைக் கூறுகள்,
திருமகள் நிலையம்,
சென்னை, முதற் பதிப்பு 2002.

24. மாணிக்கம் அ. (உ.ஆ.) – பரிபாடல் மூலமும் உரையும்,
வர்த்தமானன் பதிப்பகம்,
சென்னை 1999.

25. மாணிக்கம் ந. – மு. மேத்தாவின் சாதனைகள்,
குகன் பதிப்பகம்,

வடுவூர், முதற்பதிப்பு 2003.

26. விசுவநாதன் அ. (உ.ஆ.) – கலித்தொகை மூலமும் உரையும், நியூ செஞ்சுரி புக் ஹவுஸ், சென்னை, மூன்றாம் பதிப்பு 2007.

27. ஜெயம் அ. – தமிழ் இலக்கண வரலாறு, ஜனகா பதிப்பகம், சென்னை 2011.

**<u>அகராதிகள்</u>**

1. இராம கிருஷ்ணன் – க்ரியா தற்காலத் தமிழ் அகராதி, க்ரியா வெளியீடு, சென்னை, இரண்டாம் பதிப்பு 2011.

2. கந்தையா ந.சி. – செந்தமிழ் அகராதி, உலகத் தமிழ் ஆராய்ச்சி நிறுவனம், சென்னை, மறுபதிப்பு 1999.

3. திருமுறை உரை மணி – திருமகள் தமிழ் அகராதி, திருமகள் நிலையம், சென்னை, நான்காம் பதிப்பு 2009.

4. பவானந்தம் பிள்ளை எஸ். – பவானந்தர் தமிழ்ச் சொல் அகராதி, நியூ செஞ்சுரி புக் ஹவுஸ், சென்னை, மூன்றாம் பதிப்பு 2007.

5. வையாபுரிப் பிள்ளை எஸ். – தமிழ் லெக்சிகன், சென்னைப் பல்கலைக்கழகம், சென்னை 1955.

**<u>இணையதள நூல்கள்</u>**

1. மதுரை தமிழ் இலக்கிய மின் தொகுப்புத் திட்டம் – நரிவிருத்தம் (திருத்தக்கதேவர்) 1998 – 2009.

**ஆங்கில நூல்கள்**

1. **Day Lewis – The Poetic Image, Jonathan Caps, 1961.**
2. **Oxford – The Oxford English Dictionary, Cleredon Press, 1970.**
3. **Rene Wellek and Austin Warren – Theory of Literatures, Brace and Company Inc., Newyork 1949.**

## பின்னிணைப்பு – 1

## மு. மேத்தாவின் படைப்புகளும் சிறப்புகளும்



## பின்னிணைப்பு - I

# மு. மேத்தாவின் படைப்புகளும் சிறப்புகளும்

மு. மேத்தா அவர்கள் 34 நூல்கள் இயற்றியுள்ளார். ஒவ்வொரு நூலும் பல்வேறு பதிப்புகளைக் கொண்டதாக திகழ்கிறது. 1974இல் வெளிவந்த முதல் கவிதை நூல் **'கண்ணீர் பூக்கள்'** இதுவரை முப்பத்தி மூன்று பதிப்புகளைக் கண்டுள்ளது. **'சோழநிலா', 'மகுட நிலா'** இரண்டு வரலாற்றுப் பதினங்களும் ஆனந்த விகடனில் தொடர் கதையாக வெளிவந்தன.

**கண்ணீர் பூக்கள்; ஊர்வலம்; மனச்சிறகு; அவர்கள் வருகிறார்கள்; முகத்துக்கு முகம்; நடந்த நாடகங்கள்; காத்திருந்த காற்று; ஒரு வானம் இரு சிறகு; திருவிழாவில் ஒரு தெருப்பாடகன்; நந்தவன நாட்கள்; இதயத்தில் நாற்காலி; என்னுடைய போதிமரங்கள்; கனவுக் குதிரைகள்; கம்பன் கவியரங்கில்; என் பிள்ளைத் தமிழ்; ஒற்றைத் தீக்குச்சி; மனிதனைத் தேடி; ஆகாயத்துக்கு அடுத்த வீடு** ஆகிய கவிதை நூல்களும், வெளிச்சம் வெளியே இல்லை என்ற கவிதை சிறுகதை நூலும் எழுதியுள்ளார்.

**'மு. மேத்தாவின் சிறுகதைகள்'** என்ற சிறுகதை நூல் இயற்றியுள்ளார். **சோழ நிலா, மகுடநிலா** என்ற இரண்டு புதினங்களை இயற்றியுள்ளார். **மு. மேத்தா முன்னுரைகள்; நானும் என் கவிதையும்; பக்கம் பார்த்துப் பேசுகிறேன்; புதுக்கவிதைப் போராட்டம்; அவளுக்கு ஒரு கடிதம்; அன்புடன்;** போன்ற தலைப்புகளில் கட்டுரை நூல்களை இயற்றியவர். மு. மேத்தாவின் பேட்டிகள் **இதய வாசல்** மற்றும் **திறந்த புத்தகம்** என்னும் தலைப்புகளில் புத்தகங்களாக வெளியிடப்பட்டன. **நாயகம் ஒரு காவியம்** என்ற காவிய நூலையும் இயற்றியுள்ளார். மு. மேத்தாவின் **திரைப்படப் பாடல்கள்** என்ற தலைப்பில் மேத்தா அவர்கள் திரைப்படத்திற்கு இயற்றிய பாடல்கள் புத்தகமாக வெளியிடப்பட்டுள்ளது. செலக்டட் பொயம்ஸ் ஆப் மு. மேத்தா என்ற தலைப்பில் கவிஞர் பாலா

ஆங்கிலத்திலும், மனிதனைத் தேடி என்ற தலைப்பில் திருமதி ஜமுனா அவர்கள் இந்தியிலும், பேரா. டேவிட் ராஜா போஸ் அவர்கள் ஆங்கிலத்திலும் மொழிபெயர்த்து வெளியிட்டனர்.

## மு.மேத்தா அவர்கள் பெற்ற பரிசுகளும் விருதுகளும்

- 1970 – முதல் சிறுகதை – **'கிழிந்த கோடு'** – ஆனந்த விகடன் இதழில் 17.05.1970 இல் முதற் பரிசு பெற்று வெளிவந்தது.
- சத்திய சோதனை – இலக்கியச் சிந்தனையின் பரிசு பெற்றது.
- 1977 – **'ஊர்வலம்'** – கவிதைத் தொகுதி தமிழக அரசின் முதல் பரிசு பெற்றது.
- 1980 – ஆனந்த விகடன் பொன் விழா – **'சோழ நிலா'** வரலாற்றுப் புதினத்திற்காக ரூ. 20,000 முதல் பரிசு பெற்றார்.
- 1986 – சிறந்த கவிஞருக்கான தமிழக அரசின் **'பாவேந்தர் பாரதிதாசன் விருது'** முதல்வர் எம்.ஜி.ஆர். வழங்கினார்.
- 1996 – தமிழக அரசின் சிறந்த திரைப்படப் பாடலாசிரியருக்கான **'கலைமாமணி விருது'** முதல்வர் கலைஞர் வழங்கினார்.
- 1998 – கொழும்பு தமிழ்ச் சங்கம் – **இலக்கிய வேந்தர்** விருது வழங்கியது.
- 1998 – **பாரதி விருது** – கோவை இலக்கிய வட்டம் வழங்கி சிறப்பித்தது.
- 1998 – அமெரிக்காவில் செயின்ட்லூயிஸ் நகரில் அமெரிக்கத் தமிழிச் சங்கங்களின் கூட்டமைப்பும், தமிழ்நாடு அறக்கட்டளையும் இணைந்து வழங்கிய **கவிதைப் பணிக்கான சாதனையாளர் விருது.**
- 1998 – சிறந்த திரைப்படப் பாடலாசிரியருக்கான **'திரைப்படக் கலை வித்தகர் விருது' (கண்ணதாசன் விருது)** முதல்வர் கலைஞர் வழங்கினார்.
- 2005 – முரசொலி அறக்கட்டளையின் ஒரு இலட்ச ரூபாய் பொற்கிழியுடன் கூடிய **'கலைஞர் விருது'** – முத்தமிழ் அறிஞர் கலைஞர் வழங்கினார்.
- 2007 – **'பெரியார் விருது'** – திராவிடர் கழகத் தலைவர் கி. வீரமணி வழங்கினார்.

- 2007 – **‘ஆகாயத்துக்கு அடுத்த வீடு’** – கவிதை நூலிற்காக 2006 – ஆம் ஆண்டிற்கான மத்திய அரசின் **‘சாகித்ய அகாதமி விருது’** பெற்றார்.

## பட்டங்களும் பொறுப்புகளும்

**‘கவிவேந்தர்’ ‘புதுக்கவிதைத் தாத்தா’, ‘கவிநாயகம்’ ‘புதுக்கவதை மன்னர்’** முதலிய பல்வேறு பட்டங்கள் பெற்றுள்ளார். தமிழகக் கவிஞர் பேரவையில் தலைவர் பதவியும், மத்திய அரசின் திரைப்படத் தணக்கைக் குழு உறுப்பினராகவும், தமிழ் நாடு அரசின் அறிவியல் தமிழ் மன்றத்தின் உறுப்பினராகவும் பொறுப்புகள் வகித்தவர்.

## இலக்கிய பயணங்கள்

அமெரிக்கா, இலண்டன, ஐக்கிய அரபு எமிடேட், சிங்கப்பூர், மலேசியா, சவூதி அரேபியா, பஹ்ரின் முதலிய பல்வேறு நாடுகள் பல்வேறு நகரங்களுக்கு பயணம் செய்தவர். போபால், புது தில்லி, மும்பை, கொல்கத்தா, ஹைதராபாத், பெங்களூர் முதிலிய இந்தியாவின் பல மாநிலங்களுக்கு பயணம் மேற்கொண்டவர். அமெரிக்க நாட்டின் ஜேக்சன் பல்கலைக்கழகம், சிங்கப்பூரின் தேசியப் பல்கலைக்கழகம் மற்றும் தமிழ்நாட்டின் அனைத்துப் பல்கலைக் கழகங்களும் இலக்கிய சொற்பொழிவுகளுக்காக இவரை அழைத்து கெ ளரவித்துள்ளன.

## சிறப்புச் செய்திகள்

- பள்ளிகளிலும், கல்லூரிகளிலும், பல்கலைக்கழகங்களிலும் இவருடைய கவிதைகள் பாடநூல்களாக இடம் பெற்றுள்ளன.
- இவருடைய படைப்புகள் ஆய்வு செய்து பலா் முனைவர் பட்டம் (PhD) பெற்றுள்ளனர்.
- ஆங்கிலம், இந்தி, தெலுங்கு, மலையாளம் முதலிய பல மொழிகளில் இவருடைய படைப்புகள் மொழி பெயர்க்கப்பட்டுள்ளன.

# படிமம் ஓர் அறிமுகம்




1. டி. இ. ஹுல்ம் (அயல் நாட்டு படிமக் கவிஞர்.)
2. எக்ஸ்ரா பவுண்டு (அயல் நாட்டு படிமக் கவிஞர்.)
3. டி. எஸ். இலியட் (அயல் நாட்டு படிமக் கவிஞர்.)
4. சி. டே. லிவீஸ் (அயல் நாட்டு படிமக் கவிஞர்.)
5. பிரமிள் படிமக் கவிதையை முதலில் தமிழில் எழுதியவர்.
6. மு. மேத்தா பிரமிள் வழி வந்த படிமக் கவிஞர்.

# படிமம் ஓர் அறிமுகம்




7. கவிக்கோ அப்துல் ரகுமான் படிமம் மற்றும் குறியீட்டு கவிஞர்.
8. இராமாயணம் தொன்மத்தைக் குறிக்கிறது.
9. முல்லை குறியீட்டைக் குறிக்கிறது.
10. தாமரைப் பூ பெண்ணின் முகத்தைக் காட்சிப் படுத்தும் காட்சிப் படிமம்.
11. பிரமன் முகத்தில் உள்ள நீண்ட தாடி முதலாம் இராஜேந்திரனின் கங்கைப் படையெடுப்பை நினைவுப் படுத்தும் குறியீட்டுப் படிமம்.
12. அசோக மரத்தைப் போலவே மடங்கிய குடை இருப்பது (மெய்) உவமைப் படிமம்.

## மு. மேத்தா கவிதைகளில் காட்சிப் படிமங்கள்



1. தேங்கிய மழை நீர் கண்ணாடிப் பாளமாய் காட்சிப் படுத்துகிறது.
2. ஆடுகள் மக்களுக்கான படிமம்.
3. அஸ்தமனம் பெண்ணின் விருப்பமின்மைக்கு வந்த காட்சிப் படிமம்.
4. வீணை ஆண் பெண் இருவரையும் குறிக்கும் காட்சிப் படிமங்களாகும்.
5. குழந்தையைக் குறித்து வந்த காட்சிப் படிமங்கள்.
6. மாப்ழ ஊர் இந்தியாவை காட்சிப் படுத்தும் காட்சிப் படிமம்.

## மு. மேத்தா கவிதைகளில் காட்சிப் படிமங்கள்




7. மயானத்தில் இருக்கும் பானைகள், அரிசி, பால் பொங்கள் பண்டிகையைக் காட்சிப்படுத்தும் காட்சிப் படிமம்.
8. சூரியன் சலீமைக் காட்சிப் படுத்துகின்ற காட்சிப் படிமம்.
9. சந்திரன் அனார்கலிக்கு காட்சிப் படிமங்களாய் வந்துள்ளது.
10. கடிகாரம் காதலைக் காட்சிப் படுத்தும் காட்சிப் படிமங்களாகும்.
11. இலட்சுமி பணத்திற்கும், சரஸ்வதி கல்விக்கும் படிமங்களாக வந்துள்ளனர்.
12. தீபங்கள் தொண்டர்களையும், திரிகள் உயிரையும், தூண்டுகோல்கள் மதப் போதகர்களையும் காட்சிப் படுத்துகின்ற காட்சிப் படிமங்களாகும்.

## மு. மேத்தாவின் கவிதைகளில் உவமைப் படிமங்கள்



1. கரையை சேராத நதியினால் பயணில்லை அது போல கணவனை சேராத மனைவியின் வாழ்வு சிறப்பானதாக இருக்காது.
2. சிவப் பெருமான் காந்தியடிகளைக் காட்சிப் படுத்தி சிவன் பட்ட பிரம்படி போல காந்தியடிகள் இந்திய விடுதலைக்காக ஆங்கிலேயரிடம் பிரம்படிபட்டார்.
3. தாமரை பெண்ணிற்கான உவமைப் படிமம்.
4. கம்யூனிசத்தின் கொடி.
5. ஆண் பெண் இருவரின் கூடல்.
6. படகில் ஏற்றி வைத்த சுமைகளால் படுகு தடுமாறுவதைப் போல களிமகளும் பல ஆடவரை சுமக்கிறாள்.

## மு. மேத்தாவின் கவிதைகளில் உவமைப் படிமங்கள்



7. காரல்மார்க்ஸ் கம்யூனிசத்தை உருவாக்கியவர்.
8. பூக்களை வண்டுகள் சுற்றுவது போல திரைப்பட நடிகர்களை ரசிகர்கள் சுற்றுகிறார்கள்.
9. கி. பழனியப்பர் ஒரு அமுத நூலகம்.
10. விழிகள் இந்தியாவிற்கு உவமையாக வந்துள்ளது.
11. மூன்று முடிச்சுகள் திருமணத்திற்கு உவமையாக வந்துள்ளது.
12. குழந்தைகள் அதிகமான புத்தகங்களை சுமந்து செல்லும் காட்சி.

## மு. மேத்தாவின் கவிதைகளில் குறியீட்டு படிமங்கள்




*1.* காந்தியடிகள் இந்திய சுதந்திரத்தின் குறியீடு.

*2.* பாபர் மசூதி இராமாயணம், இராமன் மற்றும் பாபரின் அரசாட்சியைக் குறிக்கும் குறியீடு.

*3.* கலங்கரை விளக்கம் வழிகாட்டியாகவும், அடையாள சின்னமாகவும் உள்ள குறியீடு.

*4.* ரோமர்கள் வன்முறையின் குறியீடு.

*5.* சீதை கற்பின் குறியீடு.

*6.* இராவணன் பெண் ஆசையால் அழிவு நிச்சயம் என்பதற்கு குறியீடாகிறன்.

# மு. மேத்தாவின் கவிதைகளில் குறியீட்டு படிமங்கள்




*7.* கண்ணகி நீதி கேட்கும் காட்சி.

*8.* இட்லர் சர்வாதிகாரத்தின் குறியீடு.

*9.* இராமரின் வெற்றி குழுவின் வெற்றி, இராமன் வெற்றியின் குறியீடு.

*10.* இந்திரா காந்தி அமிர்தாசரஸ் பொற் கோயிலுக்கு குறியீடாகிறார்.

*11.* கும்பகோணத்தில் கிருஷ்ணா ஆரம்ப பள்ளியில் தீயில் சிக்கி இறந்த குழந்தைகள்

*12.* சிலுவை இயேசு பிரானை நினைவுப் படுத்தும் குறியீடு.